# பிள்ளையார்பட்டி

## தல வரலாறு 3/-



MS MANI, KARAIKUDI

ஆக்கியோன் :

சா. கணேசன், காரைக்குடி

உ
சிவமயம்
கணபதி துணை.

# பிள்ளையார்பட்டி

( தல வரலாறு )

ஆக்கியோன் :

சா. கணேசன்




1955.

31-1

# சமர்ப்பணம்:

எவர்களின் பேரன்பால்,
எவர்களின் பேருழைப்பால்,
எவர்களின் கண்காணிப்பால்
இத்திருக்கோவில் இவ்வளவு
சீருடன் இலங்குகின்றதோ
அவர்கட்கு — அதாவது,
பிள்ளையார்பட்டிக் கோவில்
**நகரத்தார்க்கு**

**ஆக்கியோன்**

# நன்றி உரை

ஸ்ரீ கற்பகப் பிள்ளையார் திருவருளால் இந்நூல் மகாசதுர்த்தி யாகிய இன்று வெளிவருகிறது. அப்பெருமா னருளால் இத்தலத்தின் வரலாற்றை இந்த ஆண்டிலேயே வெளியிட வேண்டு மென்று எண்ணினோம். அப்பொழுது, இத்தலத்தின் கல்வெட்டுக்கள், முதலியவற்றை ஆராய்ந்து காரைக்குடி வீர. வகையைச் சேர்ந்த ஸ்ரீ சா. கணேசன் குறிப்புகள் சேர்த்து வைத்திருக்கின்றமையை அறியலானோம். உடனே அன்னாரை அணுகிப் பிள்ளையார்பட்டி வரலாற்றை எழுதி உதவ வேண்டுமென்று கேட்டுக்கொண்டோம். தேசப்பணியும், செந்தமிழ்ப்பணியும், தெய்வப்பணியும் செய்து எல்லார்க்கும் இன்பமளிக்கும் அவர்கள் எங்கள் விருப்பத்திற்கு உடன்பட்டுப் பெரும் பிரயாசை எடுத்துக் கொண்டு இந்நூலை எழுதி முடித்துப் புத்ததக உருவில் அச்சகத்திலிருந்து வெளிவரும் வரை எல்லாப் பொறுப்புக் களையும் தாமே மேற்கொண்டார்கள்.

தேவகோட்டை நாக. குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீ. பழ. கண்ணப்ப செட்டியார் மிக்க அன்புடனும் ஆர்வத்துடனும் இந்த நூல் அச்சிட ஆன செலவுகள் அனைத்தையும் தாமே வலிந்தேற்றுக் கொண்டார்கள்.

பிள்ளையார்பட்டிப் பெருமானிடம் பெருங்காதல் கொண்டவர்களான அவர்களிருவருக்கும் நன்றி கூறுவதுடன் அவர்கட்கு எல்லா நலன்களையும் அருளும்படி கருணைக்கட லான ஸ்ரீ கற்பகவிநாயகரைப் பிரார்த்திக்கின்றோம்.

இந்த நூல் இவ்வளவு சிறப்பாக வெளிவர அருளிய விநாயகப்பெருமான் திருவருளை வாழ்த்தி வணங்குகின்றோம்.

இங்ஙனம்,
**தேவகோட்டை**
**நாக. குடும்பத்தார்.**

மன்மத-புரட்டாசி-௪. }
மகாசதுர்த்தி }

314

ஓம்

# முகவுரை

---

பெருவரங்கள் தரும்தேசி விநாயகப்
பிள்ளையார் பாதம் பணிந்து,
திருவீங்கைக் குடிமகா தேவர்அவர்
திருத்தாள்கள் வணங்கி, மேலும்
அருள்மருதங் குடிநாய ஞர்அவர்தம்
அடிமலர்கள் சேவித்து, என்றும்
மருள்கடிந்த சிவகாமி யொடு,வாடா
மலர்மங்கை அருள்கொள் வோமே.

---

ஐயன்மீர்,

பிள்ளையார்பட்டி ஒன்பது நகரக்கோவில்களுள் ஒன்று என்பது மட்டுமல்ல. காலத்தால் பழைமையானகோவிலும் ஆகும். இதுஒரு பல்லவர் திருப்பணி. சுமார் 1300 ஆண்டுகட்குமுன் சமைந்தது இக்குடைவரைக்கோவில். இந்தக் கோவிலின் வரலாறு நூல் வடிவில் வெளிவர வேண்டுமென்பது அன்பர் பல்லோர் விருப்பம். அவர்களில் சிலர் கடந்த கும்பாபிஷேகம் தொட்டே சிறியேனை இப்பணியை மேற்கொள்ளுமாறு வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள்.

ஏதோ தலபுராண அடிப்படையில் எழுதி வெளியிடுவதானல் எளிதாகவும் இருந்திருக்கும்; நானும் இசைந்திருப்பேன். வரலாற்று அடிப்

படையில் நூல் அமையவேண்டுமாயின் பாடு பெரிது. அன்றியும் வரலாற்று நூலறிவு, கல்வெட்டு ஆராய்ச்சி, இலக்கியப் புலமை, சாத்திரத் தேர்ச்சி, சமய ஒழுக்கம், முதலான தகுதிகளை உடையவர்களே மேற்கொள்ள வேண்டிய அருமைப்பணி இது.

இத்தகைய தகுதிகள் எதுவும் எளியேனுக்கு இல்லை என்பதை நன்கறிந்திருக்கும் காரணத்தால் நாட்கடத்திக்கொண்டேவந்தேன். ஆனால் நாளுக்கு நாள் அன்பர்களின் தூண்டுதல் வலுக்கத்தொடங்கி விட்டது. இந்த நிலையில் சில மாதங்களுக்கு முன்னதாக எனது அரிய நண்பரும் பிள்ளையார்பட்டிப் பெருமானிடம் பெரிதும் ஈடுபாடுடையவர்களுமாகிய தேவகோட்டை திருவாளர் பழ. கண்ணப்ப செட்டியாரவர்கள் என் வீட்டிற்கு வந்தார்கள்.

> "பிள்ளையார்பட்டித் தல வரலாற்றை இந்த ஆண்டில் எப்படியும் வெளியிட்டுத்தான் ஆகவேண்டும்; இது கற்பகப்பெருமான் திருவுள்ளம்"

என்று சொல்லி மிகவும் அன்போடும் உரிமையோடும் வற்புறுத்தினார்கள். நானும் என் தகுதியின்மையை எவ்வளவுதான் நன்குணர்ந்திருந்தாலும் வேறு வழியின்றி எல்லாம் அவனருள் என்று அவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு இப்பணியைத் தலைமேற்கொண்டேன்.

இப்பணியில் என்னைப் புகுவித்த அவனருளால் எளியேன்பெற்ற நன்மை பெரிது. முன்னர்க் கண்ட தலங்களே ஆயினும் இந்நோக்குடன் பல குடைவரைக் கோவில்களை மீண்டும் சென்று கண்டேன். இதுவரைக் காணாத தலங்களையும் கண்டு

வந்தேன். பல கல்வெட்டுப் படிகளையும் செப்புப் பட்டயப் படிகளையும் அரிதில் முயன்று பெற்றுப் படித்தேன். பேரறிஞர்கள் எழுதிய செவ்விய வரலாற்று நூல்களையும், சிற்பத்துறை, படிமக் கலைத்துறை நூல்களையும் தமிழ்ப் பேரிலக்கியங் களையும் தத்துவ, சாத்திர, தோத்திர சமயநூல் களையும் பார்த்தேன். இவற்றிற் கண்ட செய்திகள் எண்ணற்றவை.

நமது மொழி, கலை, நாகரிகம், பண்பாடு, சமயம், முதலியனபற்றிய எத்துணையோ அருமைப் பாடுகளை எல்லாம் கண்டு அளவற்ற இன்பமடைந் தேன். எளிதிற் கிட்டாத இந்தப் பெரும்பேறு ஏழையேனுக்கும் கிட்டப்பெருங் காரணமாயிருந் தது இப்பணியேயன்றோ?

அறிவாற்றல் நிரம்பாத சிறியேன் செய்த நூலில் வழுவும், பிழையும் மலிந்திருக்கலாம். அவற் றைப் பெரியோர்கள் பொருத்தருள வேண்டும்.

இந்நூலுள் காணப்பெறும் புகைப்படங்கள் அனைத்தையும் எடுத்துதவியவர் காரைக்குடி ஸ்ரீ. ராம. மீனாட்சிசுந்தரம்.

திருக்கோவில், குடைவரைக்கோவில் ஆகிய வரைப்படங்களை ஆக்கித்தந்தவர், பரம்பரை சிற்பாசாரியாரும் பல பெருந்திருப்பணிகளை நிர்மா ணித்தவரும், தற்பொழுது காந்தி ஸ்தூபத்தைச் சமைத்துக் கொண்டிருப்பவருமான காரைக்குடி ஸ்ரீ வைத்யநாத ஸ்தபதியாரின் குமாரர், கணித ஆசிரியர் ஸ்ரீ V. கணபதி B. A; B. T.

அட்டைப் படத்தை எழுதியவர் காரைக்குடி ஓவியர் ஸ்ரீ எம். எஸ். மணி.

இவர்கள் அனைவருக்கும் என் நன்றி என்றும் உரியது.

ஒன்றுக்கும் பற்றாத சிற்றறிவுடையேனை இப் பணியில் புகுவித்துப் பெரும் பேறருளிய எங்கள் குலமுதலாம் தேசிவிநாயகப்பிள்ளையார் திருவடி மலரினைச் சிந்தித்து வாழ்த்தி வணங்குகிறேன்.

உன்னை உள்ள படியறியேம் ;
உலகை உள்ள திறமுள்ளேம் ;
பின்னை அறியேம் ; முன்னறியேம் ;
இடையும் அறியேம் ; பிறழாமல்,
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை அடியேன் செயற்பால
இன்ப துன்பம் இல்லானே ?

—கம்பன்

அன்பும் பணிவுமுள்ள

மகாசதுர்த்தி
20-9-55.

**சா. கணேசன்.**

31-1

## பொருளடக்கம் :



# 1. தோற்றம்

பிள்ளையார்பட்டி எனப் பெயர்கொண்டு விளங்கும் இவ்வூர் சென்னை மாநிலத்தில் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ளது. காரைக்குடியி லிருந்து திருப்புத்தூர் செல்லும் பஸ் வழியில் குன்றக்குடிக்கு அடுத்து இருக்கிறது இது.

பிள்ளையார்பட்டி என்னும் பெயரே, இது விநாயகப் பெருமான் கோவில் கொண்டருளும் ஒரு சிற்றூர் என்பதை நன்கு விளங்க வைத்துக் கொண்டிருக்கிறது, இல்லையா?

இந்த ஊருக்குப் பிள்ளையார்பட்டி என்பதே இன்று நாடறிந்த பெயராயினும் [1]ஈக்காட்டூர், [2]மருதங்குடி,[3] திருவீங்கைக்குடி, [4]திருவீங்கைச்வரம், [5]இராசநாராயணபுரம் என்று வேறு ஐந்து பழம் பெயர்கள் உண்டு. மருதங்கூர், தென்மருதூர், கணேசபுரம், கணேச மாநகரம், பிள்ளை நகர் போன்ற பெயர்கள் பிற்காலப் பாடல்களில் காணப் பெறுகின்றன.

---

1. கல்வெட்டு எண் 11 பார்க்க; 2. கல்வெட்டு எண் 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 இசைகுடிமானம் பார்க்க; 3. கல்வெட்டு எண் 1, 2, 4, 6, 10 பார்க்க; 4. கல்வெட்டு எண் 5, 7 பார்க்க; 5. கல்வெட்டு எண் 5, 9 இசைகுடிமானம் பார்க்க;

இங்கு ராஜகோபுரங்களுடன் கூடிய பெரிய திருக்கோவில் மிக்க பொலிவுடன் விளங்குகிறது. ஆகம நெறிப்படி அருமையாகப் பூசனைகள் நடைபெறும் இக்கோவிலின் திருப்பணியைக் கூர்ந்து நோக்குவோமானல் நான்கு முறையாகத் திருப்பணி நடந்திருக்கின்றமை நன்கு புலனுகும்.

முதன் முதலாக நடந்த திருப்பணி, இன்று காணப்பெறும் திருக்கோவிலின் தெற்குப்புறத்தில் கிழமேலாக நீண்டு கிடக்கும் குன்றில் வடமுகமாக மலையைக் குடைந்து சமைக்கப்பெற்ற *குடைவரைக்கோவில் (Rock-cut Temple) ஆகும்.

இந்தக் குடைவரைக் கோவிலுக்குள் நாம் நுழைந்தால் முதலில் உள்ள கிழமேல் ஓடிய பத்தி காணப்பெறும். அதற்கு அடுத்து நான்கு தூண்கள் இடைநிற்கத் தென்வடல் ஓடிய இரட்டைப்பத்தி மண்டபம் காணப்பெறும். அம் மண்டபத்தின் கீழ்புறப் பத்தியின் தென்பால் மலை நெற்றியில் 6 அடி உயரம் உள்ள பிள்ளையாரின் காம்பீர்ய நிலையில் அமைந்த இருந்ததிருக்கோலம், அர்த்த சித்திரம் (Bas-relief) ஆக வடக்கு நோக்கி விளங்கக் காண்போம். இந்த மூர்த்திதான் பிள்ளையார்பட்டிப் பெருந்தெய்வம்; கற்பகப் பிள்ளையார் ஆன தேசிவிநாயகப் பிள்ளையார்.

அதற்கு மேற்கே அதே மலை நெற்றியில் தெற்கு நோக்கிய பல்லவ மன்னனின் உருநாட்டு நம்முடைய பாராட்டையும் நன்றியறிதலுடன் கூடிய வணக்கத்தையும் ஏற்றுக்கொள்ளச் சித்தமாக விளங்குவதைக் காண்போம்.

---

* குடைவரைக் கோவில் என்பதே 'குடை கோவில்' ஆகிப் பின்னர் 'குகைக் கோவில்' என்று மருவி வழங்குகிறது.

அந்த மேல்புறப் பத்தியின் நடுவே கிழக்குப் பார்த்த திருவாயிலுடன் கூடிய கருவறை (கர்ப்பக் கிருஹம்) *தூங்கானை மாட அமைதியிற் குடையப் பெற்றுளது. அதன் நடுவிலே குடைந் தமைத்த பெரியதொரு மகாலிங்கம் பொலிந்தினிது துலங்கக் காண்போம். இந்த மூர்த்திதான் திருவீசர் என்று வழங்கும் திருவீங்கைக்குடி மகாதேவர்.

அங்கிருந்து சிறிது வடக்கே வந்து, மேற்கே சென்று தெற்குப் புறமாகப் பார்த்தோமானல் கருவறையின் வடபுற வெளிச்சுவரில் வடக்குப் பார்த்த நிறைவுறாத அர்த்த சித்திரமாக அமைந்த மற்ரெரு உருநாட்டையும் காண்போம். இதுவும் முன்னே கண்ட பல்லவ மன்னனையே ஒத்திருப் பதை உணர்வோம்.

இவை யாவும் அந்த மலையைக் குடைந்து அங்கங்கே அமையச் செய்திருக்கின்ருர்களே யன்றி எதுவும் செய்து கொண்டுவந்து பொருத்தப் பெற்றவை அல்ல என்பதை வெகு எளிதில் தெரிந்து கொள்வோம். இந்த அளவில் உள்ள குடைவரைக் கோவில்தான் **முதல் திருப்பணி** யாகும்.

கீழும் மேலும் நான்முகச் சதுரமாகவும், இடையில் எண்முகப் பட்டமாகவும், சதுரங்களில் மலர்ந்த தாமரை விளங்க அமைந்திருக்கும் தூண் களையும், அவற்றின்மேல் இலங்கும் போதிகை களையும் நோக்கும்போது இது ஒரு பல்லவர்காலப் படைப்பே என்பது நன்கு புலனுகும். மேலும்

---

* கஜப்பிருஷ்டம் என்பர் வடநூலோர். அதாவது யானையின் பின்பாகம்போல் அமைந்த கருவறை. ∩ இந்த அமைப்பைக் கட்டப்பெற்ற கோவில்களில் நன்கு காணலாம்.

கருவறையுள் விளங்கும் மகாலிங்கம் யாண்டும் பட்டை வடிவம் பெறுமல் முழுதும் உருண்டை வடிவமே பெற்று விளங்குவதும் பல்லவர் காலப் படைப்பே என்பதை வலியுறுத்தும். அது அன்றியும், பிள்ளையார் நான்கு கரங்களுடன் அல்லாமல் இருகரங்களுடன் வீற்றிருந்தருள்வது பல்லவர் காலத் திருப்பணியே என்பதை ஐயத்திற்கு இடமின்றி வெளிப்படுத்தும். இவை யல்லாமல் அர்த்த சித்திர அமைப்பாக இலங்கும் உருநாட்டு இரண்டும் பல்லவர் கோலத்தையே உணர்த்திக் கொண்டிருப்பதுடன் 11வது எண் ணுள்ள கல்வெட்டான 'ஈக்காட்டூர்' என்ற எழுத் துக்கள் 1200 ஆண்டுகட்கு முற்பட்ட, அதாவது பல்லவர் கால எழுத்துக்களாகவேவிளங்குகின்றன. இக்காரணங்களால் இந்தக் குடைவரைக் கோவி லேச் சமைத்தவன் ஒரு பல்லவ மன்னனேஎன்பது உறுதி. ஆனல், அவன் யார் என்பதுதான் கேள்வி.

மாமல்லே, வல்லம், பல்லாவரம், மகேந்திரவாடி, மாமண்டூர், மண்டபப்பட்டு, சீயமங்கலம், நாமக்கல், திருச்சிராப்பள்ளி, நார்த்தாமலே (நகரத்தார்மலே) குடுமியான்மலே, திருக்கோகர்ணம், திருமெய்யம், பேரையூர், மலேயடிப்பட்டி, திருக்கோளக்குடி, குன்றக்குடி, முதலான கோவில்களேச் சென்று பார்த்துவந்தால் பிள்ளேயார்பட்டி முதலாம் மகேந் திரவர்மன் (கி. பி. 615 - 630) அல்லது முதலாம் நரசிம்ம வர்மன் (கி. பி. 630-668) ஆகிய இருவருள் ஒருவன் காலத்தில் அமைந்ததாய்க் கூறிவிடலாம். விழுப்புரம்-புதுச்சேரி ரயில் வழியில் சின்னபாபு சமுத்திரத்திற்குத் தெற்கே இரண்டு மைல் தொலேவில் உள்ள மண்டபப்பட்டு என்ற ஊரில் அமைந்த குடைவரைக் கோவிலின் வாயிலில் காணப்பெறும்

"கல், மரம், சுதை, உலோகம் இல்லாமலே
பல்லவன் கோவில் சமைத்தான்"

என்ற கல்வெட்டைக் கொண்டு மகேந்திரவர்மனால் சமைக்கப்பட்ட முதற் குடைவரைக் கோவில் அது தான் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். அங்கு பிரமன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் கோவில் கொண்டிருக்கின்றனர். இம்முறையில் அவன் கண்ட வெற்றி, தக்க மலை கண்ட இடங்களில் எல்லாம் குடைவரைக் கோவிலை அமைக்கத் தூண்டியிருக்க வேண்டும். அப்படி அவன் அமைத்த கோவில்களுள் பிள்ளையார் பட்டியும் ஒன்றாக இருக்கலாம் என்று சிலர் கருதக் கூடும். ஆனால் அவனுக்குப்பின் பட்டத்திற்கு வந்த அவன் மகனான முதலாம் நரசிம்மவர்மனே இதைச் சமைத்தவன் என்று கொள்ளுவதே பொருந்துவதாயிருக்கிறது.

முதலாம் நரசிம்மவர்மன் பேராற்றலும் பெரும் பக்தியும் உடையவன். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரும், சிறுத்தொண்டர் என்ற பெயர் பெற்றுப் பெரும்புகழ் கொண்டவருமான பரஞ்சோதியார் இவன் சேனைத் தலைவராவர். இரண்டாம்புலிகேசி என்னும் சாளுக்கிய மன்னனை எதிர்த்து வாதாபிக்குச் சேனை நடத்திச் சென்று புலிகேசியும் புறங்காட்டி ஓடுமாறு வெற்றிகொண்டு வாதாபியை அடிப்படுத்தி அங்குள்ள பல வளங்களையும் கொணர்ந்து நரசிம்மவர்மன் முன் வைத்தவர் பரஞ்சோதியாரே. இவ்வெற்றி கிட்டியது கி. பி. 642-ல் என்பர் வரலாற்றாராய்ச்சியாளர்.

படைவலியும்,மனவலியும்,நிறைந்த மாவீரனாகிய புலிகேசியை அவன் பதியிலேயே வெற்றிகொண்டு

* "பன்மணியும் நிதிக்குவையும், பகட்டினமும், பரித்தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன் முன்கொணர்ந்த"

பரஞ்சோதியாரின் பேராற்றல் 'இரணஜயன்' ஆன நரசிம்ம வர்மனுக்கே வியப்பூட்டியதாம். அப்பொழுது உடனிருந்த அமைச்சர்கள்

* "மதிஅணிந்தார் திருத்தொண்டு
வாய்த்தவலி உடைமையினுல்
எதிர்இவர்க்கு இவ்வுலகில்
இல்லைஎன எடுத்துரைத்தார்"

களாம். அதைக்கேட்ட நரசிம்ம வர்மன் பதை பதைத்து "அந்தோ கெட்டேன்! என்ன அபசாரம் செய்துவிட்டேன்! தங்கள் பெருமையை நானும் அறிய முடியாதவாறு அத்துணை அடக்கமாகப் பணியாற்றிக் கொண்டிருந்திருக்கிறீர்கள். இனியும் தங்களை என் கீழ் சேவகம்செய்ய அனுமதிப்பனேல் அது எம்பெருமானுக்கே இழைக்கும் ஒரு பெரும் பிழையாகும். இந்நாள்வரைத் தங்கள் தகைமையை உணராமல் பணிகொண்ட என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்" என்று பணிந்திறைஞ்சி அவர்க்கு நிறைநிதியும், பெருநிலமும் அளித்துச்

* "செம்மைநெறித் திருத்தொண்டு
செய்யும்என விடைகொடுத்தான்."

மன்னவனிடம் விடைபெற்றுத் திருச்செங்காட்டங்குடி என்னும் தமது ஊருக்குச் சென்று அங்கு ஒரு திருக்கோவில் எடுத்தார். அதற்குக் கணபதீச்சுரம் என்று பெயர் கொடுத்தார். வாதாபிப் போரினல் இவர்க்குக் கிட்டியது புகழ் நிறைந்த வெற்றி மட்டுமில்லை. ஆங்குப் பெரு வழக்

---

* பெரியபுராணம் - சிறுத்தொண்டர்.

கில் இருந்த பிள்ளையார் வழிபாடு இவர் மனத்தை ஈர்க்க, ஓங்கார உருவினன் பால் நீங்காத பெரும் பக்திச் செல்வத்தையும் இவர் பெற்றிருக்கிறார். போர் நடந்த நாள் எல்லாம் அப்பெருமானை வழி பட்டு வந்திருக்கிறார். வெற்றியும் இவர்க்கே உரிமை யாயிற்று அங்ஙனம் தமக்கு வெற்றி அருளிய கணபதிப் பெருமானை நினைந்தே நன்றிப் பெருக் குடன் 'கணபதீச்சுரம்' எனப் பெயர் தந்தார் என்பர் ஆராய்ச்சியாளர்.

"பொடிநுகரும் சிறுத்தொண்டர்க்கு
அருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான்
கணபதீச் சுரத்தானே." (திருமுறை-க)

"செங்காட்டங் குடிமேய
சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டுள் அனல்ஏந்தி
விளையாடும் பெருமானே— (திருமுறை-ந)

என்றெல்லாம் அவர் காலத்தவ ரான சம்பந்தப் பெருமான் சிறுத்தொண்டரின் வேண்டுகோளின் படி ஆங்குப் போந்தருளி இரு பதிகங்கள் அருளிச் செய்திருக்கிறார்.

கயமுகாசுரனைக் கொன்ற பழி விலகச் சிவ பிரானை விநாயகப் பெருமான் பூசித்ததான ஐதி கத்தை இத்தலம் புலப்படுத்திக் கொண்டிருக் கிறது. சிறுத்தொண்ட நாயனருக்குச் சிவபெருமா னிடத்தும், பிள்ளையாரப்பனிடத்தும் முற்றி இருந்த பெரும் பக்தியைப் புலப்படுத்துவதே இக் கோவி லின் தோற்றம் என்பதை அது கொண்ட பெயரா லும் குறிக்கும் ஐதிகத்தாலும் நன்குணரலாம்.

இந்தக் கோவில் திருப்பணி நடைபெறும் காலத்தும், திருப்பணி நிறைவேறிக் கடவுண் மங்கலம், (தெய்வப் பிரதிஷ்டை) நிகழ்ந்த காலத்தும் நரசிம்ம வர்மன் திருச்செங்காட்டங்குடிக்குப் போய் வந்திருக்கக்கூடும். அதனாலும், சிறுத் தொண்டர் உரையாலும் இவனுக்கும் பிள்ளையாரிடம் பேரன்பு சுரந்திருக்க வேண்டும்.

வாதாபி வெற்றிக்குப் பின் பல்லவர் ஆட்சி மிக்க அமைதியுடன் நடைபெற்றிருக்கிறது. அந்தக் காலத்தேதான் நரசிம்ம வர்மன் தன் தந்தை நிறைவேற்ற விட்ட கோவில் திருப்பணிகளில் மும்முரமாக ஈடுபட்டிருந்திருக்கின்றான். வாதாபி வெற்றியும், சிறுத்தொண்டரும், திருச்செங்காட்டங்குடியும் இவனுள்ளத்தே பதிந்துவிட்டமையால் அந்த ஐதிகத்துடன் குடைவரைக் கோவில்கள் சமைக்கத் தொடங்கியிருக்கக் கூடும் என்று கொள்ளுவதே ஏற்புடைத்தாகும்.

அங்ஙனம் அமைக்கப்பெற்ற குடைவரைக் கோவில்களுள் பிள்ளையார்பட்டியும் ஒன்றாதல் வேண்டும். சிற்ப அமைதி, எழுத்துக்களின் தோற்றம், உருநாட்டு முதலிய காரணங்களால் நரசிம்ம வர்மன் காலத்தில் உண்டானது இக்குடைவரைக் கோவில் என்று கொள்ளுவதே சரி.

எனவே, பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோவில் நரசிம்ம வர்மனின் ஆட்சிக்காலத்தில் வாதாபி வெற்றிக்குப் பின்னர், அதாவது கி. பி. 642-க்கு மேல் 668-ஆம் ஆண்டுக்குள் சமைக்கப் பெற்றிருக்கவேண்டும். எனவே இந்த முதல் திருப்பணி சுமார் 1300 ஆண்டுகட்கு முற்பட்ட தென்பதில் சிறிதும் ஐயமில்லை.

*

## 2. வளர்ச்சி

இக்குடைவரைக் கோவிலுள் சுவர்களிலும், தூணிலும் காணப்பெறுகின்ற கல்வெட்டுக்கள் நமக்கு ஓரளவு செய்திகளைத்தான் புலப்படுத்துகின்றன என்றாலும் அவற்றிலிருந்து மிக முக்கியமான செய்திகளும் சில கிடைக்கின்றன.

இந்தக் குடைவரைக் கோவிலுக்குச் சில அடி வடமேற்கில் கற்றளி (கல்லால் கட்டப்பெற்ற கோவில்) ஒன்று இருந்திருக்கிறது. அங்கு எழுந்தருளியிருந்த பெருமானுக்கு மருதங்குடி நாயனார் என்பது திருப்பெயர். அக்கோவில் இருந்த இடத்தில் இப்பொழுதுள்ளபெருங்கோவில்விளங்குகிறது. அந்தப் பழைய கற்றளியில் பல கல்வெட்டுக்கள் இருந்திருக்க வேண்டும். அவற்றை அக்காலத்தில் யாரும் படி எடுக்காமல் விட்டு விட்டதனுல் நமக்குக் கிடைக்கக்கூடிய வேறு பல செய்திகள் இன்று நமக்குக் கிடைக்குமாறில்லை.

முதன் முதலில் மருதங்குடி வயல்களை மருதங்குடி ஊராரிடம் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார் விலைக்கு வாங்கியிருக்கிறார்கள். பின்னர் சம்பந்தப்பட்ட அதளையூர் நாட்டவரிடமும், கல்வாயில் நாட்டவரிடமும், கீழ்க்குண்டாற்று நாட்டவரிடமும், அவர்கட்கு உள்ள உரிமையை வாங்கிப்

பிடிபாடு (Record) செய்துகொண்டிருக்கிறார்கள் (கல்வெட்டு எண் 8). அதற்குப் பிறகு அந்நாளில் பாண்டி மண்டலத்தை வென்று ஆட்சி செய்து கொண்டிருந்த (பரகேசரி மூன்றாம் குலோத்துங்க சோழ தேவரான) கோனேரின்மை கொண்டானிடம் முழுஉரிமையும் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். அவன் நகரத்தார்க்குக் கொடுத்த திருமுகத்திலிருந்து மருதங்குடியில் இராசநாராயணபுரம் என்ற பெயருடன் ஒரு நகரம் அமைத்து அதில் குடியேறி வாழ்ந்துவர அனுமதித்திருக்கின்ற செய்தி நன்கு புலனாகிறது (கல்வெட்டு எண் 9).

இதற்குமுன் இவர்கள் கானநாட்டைச் சேர்ந்த காரிகுடி என்ற ஒரு நகரத்தில் வசித்துக்கொண்டிருந்திருக்கிறார்கள். அந்தக் காரிகுடி அந்நாளில் பல பெருந்தெருக்களை உடைய ஒரு பேரூராக இருந்திருக்க வேண்டும் (கல்வெட்டு 9). காரிகுடி என்பது இப்பொழுதுள்ள காரைக்குடி அல்ல. வெள்ளாற்றுக்குத் தென்பால் அமைந்த ஒரு பகுதி அந்நாளில் கானநாடு அல்லது கானாடு என்ற பெயரால் வழங்கி வந்திருக்கிறது. அப்படியே வெள்ளாற்றுக்கு வடபால் அமைந்தபகுதி கோனாடு என்ற பெயரால் வழங்கிவந்திருக்கிறது. இவற்றைப் புதுக்கோட்டைச் சமஸ்தானக் கல்வெட்டுக்களிலிருந்து நன்கறியலாம். இந்தக் கானாட்டைக் காத்தவன் பெயராலேயே 'கானாடுகாத்தான் பட்டி' ஏற்பட்டிருக்கிறது. அந்தக் காரிகுடியில் வசித்துக் கொண்டிருந்த காலத்திலேதான் மருதங்குடியை விலைக்கு வாங்கி இராசநாராயணபுரம் என்ற பெயருடன் ஒரு நகரம் அமைத்துப் பின்னர் இங்கு வந்து குடியேறியிருக்கிறார்கள்.

சேர,சோழ,பாண்டிய நாடென்று முப்பிரிவாக விளங்கிய தமிழகம் பின்னர் நான்கு மண்டலங்

களாயின. அவை சேர மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம், தொண்டை மண்டலம் என்ற பெயரால் விளங்கின. அந்நாளில் பாண்டி மண்டலம் பல வளநாடுகளாக வகுக்கப் பெற்று நிர்வகிக்கப்பெற்று வந்திருக்கிறது. ஒரு வளநாட்டில் பல நாடுகள் அடங்கும். நாட்டைக் கூற்றம் என்றும் வழங்கிவந்திருக்கின்றனர்.

மண்டலம் என்பது தற்கால மாகாணம் போன்றது என்றும், வளநாடு என்பது தற்கால ஜில்லா போன்றது என்றும், நாடு அல்லது கூற்றம் என்பது தற்கால தாலூகா போன்றது என்றும் கொள்ளலாம்.

பாண்டி மண்டலம், மதுரோதய வளநாடு, வரகுண வளநாடு, திருவழுதி வளநாடு, விருதராஜப் பயங்கர வளநாடு, சீவல்லப வளநாடு, அமிதகுண வளநாடு, வீரநாராயண வளநாடு, பராந்தக வளநாடு, கேரளசிங்க வளநாடு என்பன போன்ற பல பிரிவு களாக வகுக்கப்பெற்றிருந்திருக்கிறது. அவற்றுள் நமது பகுதி பெரும்பாலும் கேரளசிங்கவள நாட்டி லேயே அடங்கியதாகும். இவ்வளநாட்டில் அடங்கிய நாடுகள் எத்தனை என வரையறுத்துக் கூற முடிய வில்லை. எனினும் கல்வெட்டுக்கள் பட்டயங் களிலிருந்து பலநாடுகளின் பெயர்களை ஒருவாறுகக் கண்டறிய முடிகிறது.

கல்வாயில் நாடு, கீழ்க்குண்டாற்று நாடு, மேற் குண்டாற்று நாடு, சூரன்குடி நாடு, பிரம்பூர் நாடு, பாலையூர் நாடு, இரும்பா நாடு, அதளையூர் நாடு, முதலான பல நாடுகள் இந்த வளநாட்டில் அடங் கியவையாகும்.

ஒரு நாடென்றால் பல ஊர்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குமல்லவா? அங்ஙனமே கீழ்க்

குண்டாற்று நாட்டில் கழநிவாசல், தலைக்காவூர், அளகாபுரி, நேமம், குன்றக்குடி, சிறுவயல், தென்கரை, அதிகரம், திருவீங்கைக்குடி, திருப்புத்தூர் முதலான நூற்றுக்கு மேற்பட்ட ஊர்கள் அடங்கும்.

மருதங்குடியான இராசநாராயணபுரம் என்னும் பிள்ளையார்பட்டியும் கீழ்க்குண்டாற்று நாட்டுள் அடங்கியதே. எனவே பிள்ளையார் பட்டியைக் "கேரள சிங்க வளநாட்டுக் கீழ்குண்டாற்று நாட்டில் மருதங்குடியான இராச நாராயணபுரத்துப் பிள்ளையார்பட்டி" என்றே குறிப்பிடவேண்டும். ஆனால் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார் நெடுநாள் இளையாத்தங்குடியில் வதிந்து வந்தமையாலும், இவர்களும், இரணியூராரும் இளையாத்தங்குடியின் உட்பிரிவாகவே விளங்கி வந்தமையாலும், அக்காலத்தில் எழுதிவந்த சொற்றொடரை மாற்ற மனங்கொள்ளாமல் இன்றும் கல்வாயில் நாட்டைக் கண்டே தங்கள் இசைகுடிமானத்தை எழுதிவருகிறார்கள். மேலும் பண்டைய மரபுவழி இளையாத்தங்குடியிலும் திருமணப் பதிவு செய்து பாக்கு வைத்துத் திருமண மாலை கொள்ளுகிறார்கள். இனி மருதங்குடி முதலான ஊர்ப்பெயர்கள் ஏற்பட்ட காரணங்களைப் பார்க்கலாம்.

மருதமரம் நிரம்பி இருந்த பகுதியில் மக்கள் குடியேறியதால் அப்பகுதிக்கு மருதங்குடி என்ற பெயர் கொடுக்கப்பெற்றிருக்கிறது.

ஈங்கை என்றால் இண்டைச் செடி என்றும், ஈங்கு என்றால் சந்தன மரம் என்றும் பொருளாகும். இவற்றில் ஒன்றின் காரணமாக ஊருக்கு ஈங்கைக்குடி என்று பெயர் கொடுக்கப்பெற்றிருக்கிறது. பின்னர் 'திரு' என்ற அடைமொழியும் கூட்டி (திரு + ஈங்கை + குடி) திருவீங்கைக்குடி

என்று வழங்கி வந்திருக்கிறது. சந்தனமரம் நமது பகுதித் தட்ப வெப்ப நிலையில் உண்டாவது அருமை யாதலால் சந்தன மரம் காரணமாக இப் பெயர் ஏற்பட்டிருக்க முடியாது. எனவே இண்டைச்செடி காரணமாகவே இப்பெயர் ஏற்பட்டிருக்கவேண்டும் என்பது ஒருதலை.

ஈங்கைக்குடி என்பதே இன்று ஈச்சங்குடி என்று வழங்கி வருகிறது. அதன்பால் உள்ள வயல் இன்று குன்னுவயல் என்ற பெயரால் வழங்கி வருகிறது. இதன் சரியான பெயர் குன்ற வயல் என்பதேயாகும். கல்வெட்டு எண் 1-ல் வரி 12-ல் "**திருவீங்கைக் குடிப்பால் குன்றவயலில்**" என்று குறிப்பிடப் பெறுவதை நோக்கினல் ஈங்கைக்குடி என்பதே ஈச்சங்குடி என்றும், குன்றவயல் என்பதே குன்னுவயல் என்றும் மருவி வழங்கிவந்திருக்கின்றமை தெள்ளிதில் புலனுகும்.

இனி 'ஈக்காட்டூர்' என்ற பெயரின் தோற்றத்தைச் சிறிது பார்க்கலாம். இக்குடைவரைக் கோவிலைக் குடைந்தவர்கள் பல்லவர்கள் என்பதை முன்னமேயே கண்டோம். அவர்கள் தங்கள் பகுதிப் பெயரை இதற்கு இடக் கருதியிருக்கவேண்டும். பல்லவர் நாடான தொண்டை மண்டலம் அக்காலத்தில் 24 கோட்டங்களாகப் பிரிக்கப்பெற்றிருந்திருக்கிறது. அவற்றுள் ஒன்று ஈக்காட்டுக் கோட்டம் ஆகும். (கோயிற் சாசனங்கள் எண் 1101; செங்கற்பட்டு மானுவல் பக்கம் 438.) அப்பகுதியில் இருந்து வந்த சிற்பிகளால் இது குடையப்பெற்றிருக்கலாம். அவர்கள் தங்கள் கோட்டத்தின் ஊர்ப் பெயரான "ஈக்காடு" என்பதைக் குறிக்கும் "ஈக்காட்டூர்" என்ற பெயரை இவ்வூருக்கு இட்டு மகிழ்ந்திருக்கலாம். அதைக் குடைவரைக் கோவில்

முன்பத்தி மேற்புறச் சுவரின் தென் மூலையில் பொறித்துமிருக்கலாம் (கல்வெட்டு எண் 11).

இனி இங்கே கோவில்கொண்டு எழுந்தருளியுள்ள பெருமான்களைப் பற்றியும், அவர்கட்கு வழங்கிவந்த - வருகின்ற பெயர்களைப்பற்றியும் ஓரளவு தெரிந்துகொள்ள முயல்வோம். இங்கு காணப்பெறும் கல்வெட்டுக்களில் மூன்று பெருமான்கள் பெயர் குறிக்கப்பெறுகின்றனர். எனவே மூன்று பெருமான்கள் மூலவராக இருந்தருள்வது பழைமை தொட்டே என்பது நன்கு புலனாகிறது.

குடைவரைக் கோவிலில் வடதிசை நோக்கிக் கோவில்கொண் டெழுந்தருளியுள்ள பிள்ளையாரப்பனைத் "**தேசி விநாயகப் பிள்ளையார்**" என்று 1—5 எண்ணுள்ள கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. தேசி விநாயகப் பிள்ளையார் என்றால் ஒளி அழகு உள்ள ஒப்பற்ற தலைவனான மூத்த திருப்பிள்ளையார் என்பது பொருளாகும். இப்பெயரே பழம் பெயராக இருப்பினும் விநாயகப் பெருமானுக்கு மேற்கொண்டு ஒன்பது பெயர்கள் வழங்கி வந்திருக்கின்றமையைப் பிற்சேர்க்கையில் காணலாம்.

குடைவரைக் கோவிற் கருவறையுட் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குத் திருவீங்கைக்குடி மகாதேவர் (கல்வெட்டு எண் 1, 2, 6, 10) திருவீங்கைக்குடி நாயனார் (கல்வெட்டு எண் 4) மருதங்குடியான இராசநாராயணபுரத்து உடையார் (கல்வெட்டு எண் 5), திருவீங்கைச்சுரமுடைய நாயனார் (கல்வெட்டு எண் 5, 7) என்ற பெயர்கள் காணப்பெறுகின்றன. இன்று வழங்கும் திருவீசர் என்ற பெயர் அவற்றின் குறுக்கம் என்றே கொள்ள வேண்டும். திருவீங்கைக்குடி காரண

மாகவே பெருமானுக்கு இப்பெயர் தோன்றியிருக்கிறது என்பது தேற்றம்.

தனிக் கற்றளியிற் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குத் திருமருதங்குடி நாயனர், மருதங்குடி நாயனர் (கல்வெட்டு எண் 4, 6) என்ற பெயர்கள் காணப்பெறுகின்றன. இன்று வழங்கும் மருதீசர் என்ற பெயரும் அங்ஙனமே குறுக்கம் என்று கொள்ளுவது பொருந்தும். மருதங்குடி காரணமாகவே இப்பெருமானுக்கு இப்பெயர் உண்டாகியிருக்கிறதென்பதும் தெளிவு.

மலையில் குடைந்து பெருந் திருவுருவினராய் அமைக்கப்பெற்ற பெருமானை மகாதேவர் என்றும், சிறிய திருவுருவினராய்ப் பொலியும் பெருமானை நாயனர் என்றும் கூறுவதன் அருமைப்பாடு அறிந்தின்புறத் தக்க தாகும்.

இரு பெருமான்கட்கும் பள்ளியேறு நாச்சியார் பற்றிக் கல்வெட்டு எண் 6-ல் பேசப் பெற்றாலும் பெயர் முதலிய எச்செய்தியும் அறிய முடியவில்லை. சிவகாமி, வாடாமலர்மங்கை என்ற திருப்பெயர்களே நடப்பு வழக்கிலிருந்து தெரியவருகின்றன.

திருவீங்கைக்குடி = திருவீங்கைக்குடி மகாதேவர்
மருதங்குடி = மருதங்குடி நாயனர்
பிள்ளையார்பட்டி = தேசிவிநாயகப் பிள்ளையார்

இவற்றிலிருந்து நமக்குப் புலனுகின்ற ஒருவிசேஷம் என்னவென்றால் சிவபெருமான் திருவுருவம் இரண்டிற்கும் ஊர் காரணமாகப்பெயர் தோன்றியிருக்கப் பிள்ளையார் காரணமாக ஊருக்கே பெயர் தோன்றியிருக்கிறது என்பதாகும். அந்தப் பெயரே, அதாவது பிள்ளையார்பட்டி என்ற அந்தப் பெயரே

மற்றைப் பெயர்களைவிட எங்கணும் பெரு வழக்காய் மேலோங்கி விளங்குகிறது.

இங்குள்ள கல்வெட்டுக்களில் காணப்பெறும் மன்னர் பெயர்களைக் கொண்டு காலவரையறை செய்தோமானல்

[ சீவல்லப தேவர் .... கி. பி. 1091-1116
விக்கிரமபாண்டிய தேவர் கி. பி. 1180-1190
கோனேரின்மைகொண்டான்
(3ம் குலோத்துங்க சோழன்) கி. பி. 1178-1223
சுந்தரபாண்டிய தேவர் கி. பி. 1216-1238
குலசேகர தேவர் .... கி. பி. 1266-1311 ]

சுமார் 1300 ஆண்டுகட்குமுன் தோன்றிய இப் பழம் பெரும் கோவில் கி. பி. 12ம் நூற்றூண்டின் பிற் பகுதியில் அல்லது 13ம் நூற்றூண்டின் முற் பகுதியில் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத் தார்க்கு உரிமையாயிற்று என்பது எவ்வித ஐயத் திற்கும் இடமின்றி நன்கு புலனுகும்.

எனவே சுமார் 700 ஆண்டுகட்கு முன்பிருந்தே இத்திருக்கோவில், சுற்றுப்புற நிலபுலங்கள் ஆகிய வற்றின் உரிமையும், நிர்வாகமும் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தாரிடம் இருந்துவருகின்றன.

இந்தக் குடைவரைக் கோவிலுட் காணப் பெறும் கல்வெட்டுத் தொகை பதினென் ருகும். அவை விளக்கக் குறிப்புகளுடன் பிற்சேர்க்கை யாகக் கொடுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் 9 வது கல்வெட்டு

"...............காரிகுடி ஐஞ்ஞூற்றுவப் பெருந் தெருவில் வசிக்கும் நகரத்தார் மருதங்

குடியும் இவ்வூர் வயலும் விலைக்குப் பெற்றுக்கொண்டிருக்கிற பிடிபாட்டிற்கேற்ப நாட்டுக் குரிய விகிதப்படி கடமை கொள்ளும்படியும், இங்கே இராசநாராயணபுரம் என்ற பெயருடன் ஒரு நகரம் அமைத்துக் குடியேறும்படியும் உரை செய்தோம்''

என்ற பொருள் கொண்ட அரச சாசனமாகத் திகழ்கிறது. பிள்ளையார்பட்டிக்கோவில் நகரத்தார் இன்றும் தமது இசைகுடிமானத்தில் "மருதங்குடியான இராசநாராயணபுரத்தில் பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையார்" என்ற சொற்றொடரை ஆண்டுவருவது ஒப்பிட்டு உணரத்தக்கதாகும். இனி இந்தக் கோவிலின் வளர்ச்சியைப் பார்ப்போம்.

இந்தக் குடைவரைக் கோவிலையும், இதை ஒட்டி அமைந்திருந்த மருதங்குடி நாயனார் கற்றளியையும், மருதங்குடிக் கிராமத்துடன் அனைத்துரிமையும் அடங்கக் கொண்டதும், நகரத்தார் குடைவரைக் கோவிலின் தூய்மை காப்பாற்றப் பெறுவதற்காக வாயிலில் மதில் எடுத்துக் கதவு நாட்டிக் காப்பிட்டிருக்கிறார்கள். விநாயகப் பெருமானுக்கும், மகாதேவர்க்கும் விமானங்கள் சமைத்திருக்கிறார்கள். பிள்ளையார் திருச்சந்நிதியில் இராஜ கோபுரம் எழுப்பியிருக்கிறார்கள். ஊருக்கு வடபால் அமைந்திருக்கும் கொங்கு நாச்சியம்மன் கோவிலையும் கட்டியிருக்கிறார்கள். நகரத்தாரின் சமுதாய முறைகளை நிர்வகிப்பதற்காக நகர விடுதியையும் சமைத்திருக்கிறார்கள். இதை **இரண்டாவது திருப்பணி** என்று கூறலாம்.

இதற்குப் பின்னர் சுமார் 60 ஆண்டுகட்கு முன்னர் இப்பொழுது காணப்பெறும் அளவுக்கு

கோவிலைப் பத்திரித்து ஆகம, சிற்ப நூன்முறை வழாது திருப்பணி செய்துள்ளார்கள். அலங்கார மண்டபமும், மருதீசர் திருச்சந்நிதி இராஜகோபுரமும் எஞ்சி நிற்க, மற்றைய அனைத்தையும் மாண்புறச் சமைத்திருக்கிறார்கள். பிள்ளையார் திருச்சந்நிதியில் உள்ள ஊருணியை வெட்டியும் கட்டியும் சீர் செய்திருக்கிறார்கள். இதை **மூன்றாவது திருப்பணி** என்று சொல்லலாம். இந்தப் பணி தொடங்கிய உடனேயே இப்பொழுதுள்ள நகரவிடுதியை விசாலமும் உறுதியும் வாய்ந்த பெருங் கட்டாகக் கட்டித் தங்கள் சமுதாய முறைகளை நிர்வகித்து வரத் தக்க வழிவகைகளையும் வகுத்திருக்கிறார்கள்.

பின்னர் சுமார் இருபத்தைந் தாண்டுகட்கு முன்னர் அலங்கார மண்டபமும், மருதீசர் திருச்சந்நிதி இராஜ கோபுரமும் வனப்பும், எடுப்பும் கொண்டதாக அமைக்கப்பெற்றுக் கோவில் திருப்பணி நிறைவுற்றது. இதை **நான்காம் திருப்பணி** என்றுரைக்கலாம். இந்தக்காலத்தில் நகரத்தார் பெண்டிர் விடுதியும், சிப்பந்திகட்குப் புதிய இல்லங்களும் கட்டப்பெற்றன. அத்துடன் ஐயனார் கோவில், முப்பலிக்கருப்பர் கோவில், சிறுவயல் முத்துக்கற்பக விநாயகர் கோவில் முதலியனவும் புதுப்பிக்கப் பெற்றன. இவையன்றி வாகனங்கள், கேடகம், தேர் முதலியனவும் இக்காலத்தே தான் செம்மையாகச் செய்யப்பெற்றன.

இவ்வளவும் "பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்" என்ற கோத்திரத்தவரான இந் நகரத்தார் தங்கட்குள்ளிருந்துமட்டும் சேர்த்தும் சேமித்தும் நிர்வகித்து வரும் தங்கள் சமுதாயப் பொருளிலிருந்தே உண்டாக்கியும், காத்தும், பேணியும் வருகிறார்கள். இன்றும் கோவில் பூசை,

படித்தரம் எல்லாம் சிறந்த முறையில் நடைபெறக் கோவில் வருமானம் போதாமல் இருந்தும், இந் நகரத்தார்கள் தங்கள் சமுதாய நிதியி லிருந்து கொடுத்தே எம்பெருமான் திருக்கோவில் நித்திய நைமித்திக வழிபாடுகள் யாவும் எவ்வளவிலும் குறைவுறாது நிறைவேறச் செய்து வருகிறார்கள்.

தங்கள் சமுதாய முறைகளை நிர்வகிப்பதுடன் இக்கோவிலின் பரிபாலனத்திற்காகவும் பின் கண்ட பதினாறு காரியக்காரர்கள் (Trustees) நகரத்தாரால் அமைக்கப் பெற்றிருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| 1 | காரைக்குடி மெ. மெ. குடும்பத்தார்<br>ஷை யூர் ஆத. முரு. குடும்பத்தார் | ௧ |
| 2 | வலையபட்டி மு. நா. அ. குடும்பத்தார்<br>ஷை யூர் ந. ராம. அ. குடும்பத்தார் | ௧ |
| 3 | கண்டனூர் மு. நா. குடும்பத்தார் | ௨ |
| 4 | ஆ. முத்துப்பட்டணம் சித. மு. குடும்பத்தார் | ௨ |
| 5 | காரைக்குடி வீர. குடும்பத்தார் | ௩ |
| 6 | கண்டவராயன்பட்டி பழ. கரு. குடும்பத்தார் | ௩ |
| 7 | காரைக்குடி அடை. ஆத. குடும்பத்தார்<br>ஷை யூர் கு. மெ. குடும்பத்தார் | ௪ |
| 8 | பூலான்குறிச்சி ராம. ப. வ. குடும்பத்தார் | ௪ |
| 9 | நற்சாந்துபட்டி கும. பெரி. குடும்பத்தார் | ௫ |
| 10 | காரைக்குடி ஆவி. ப. குடும்பத்தார்<br>ஷை யூர் மெ. ராம. குடும்பத்தார் | ௫ |
| 11 | கோனாபட்டு கு. அ. ப. அரு. குடும்பத்தார் | ௬ |
| 12 | அரிமளம் பெ. ராம. குடும்பத்தார் | ௬ |
| 13 | அமராவதிபுதூர் ராம. வயி. குடும்பத்தார் | ௭ |
| 14 | தேவகோட்டை நாக. குடும்பத்தார் | ௭ |

15 காரைக்குடி முரு. குடும்பத்தார்
16 குருவிக்கொண்டான்பட்டி
கரு. பழ. குடும்பத்தார் } அ

ரத்தாட்சி (1924) ஆண்டு முதல் ஷை காரியக்காரர்கள் குடும்பங்களிலிருந்து வரிசைக் கிரமமாக ஆண்டுக்கு இரண்டு குடும்பத்தார்கள் தங்கட்குள் குடும்பத்திற்கு ஒருவர் வீதம் தக்க இருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்ப நகரத்தார் அங்கிகாரத்தின்மேல் அந்த இருவரும் குறிப்பிட்ட அந்த ஆண்டு முழுவதற்கும் நடப்புக் காரியக்காரர்கள் (Trustees in charge) ஆகஇருந்து தங்கள் சமுதாய விஷயங்களையும், கோவில் நடைமுறை முதலானவற்றையும் நிர்வகித்து வருகின்றார்கள். இப்படியே எட்டாண்டுக்கு ஒருமுறை இதே அட்டவணைப்படி திரும்பத் திரும்ப இதே வரிசையில் நடப்புக்காரியக்காரர்கள் பொறுப் பேற்று நிர்வகிப்பார்கள்.

*

## 3. விழாக்கள்.

இனி இங்கு நிகழும் திருவிழாக்கள் முதலிய வற்றைப் பார்க்கலாம். ஒவ்வொரு சதுர்த்தி யன்றும் இரவு விநாயகப் பெருமான் வெள்ளி மூஷிக வாகனத்தில் எழுந்தருளிக் கோவில் உட் பிராகாரத்தில் வலம் வருவார். திருக்கார்த்திகை யன்று விநாயகப் பெருமானும் உமாதேவி சமேத சந்திர சேகரப் பெருமானும் திருவீதி பவனிவரப் பிள்ளையார் திருச்சந்நிதியிலும், மருதங்குடி நாயனார் திருச்சந்நிதியிலும் 'சொக்கப் பனை' கொளுத்தப் பெறும்.

மார்கழித் திருவாதிரை நாளன்று சிவகாம சுந்தரி சமேத நடராஜப் பெருமான் திருவீதி பவனி வருவார். அன்று சிவகாமசுந்தரியின் ஊடலை நீக்க நடராஜப் பெருமான் கைக்கொள்ளும் உபா யங்கள் மிகவும் சுவையுடையன. ஊடல் நீக்கத்தின் பொருட்டாய் எழுதிக்கொடுக்கும் பிடிபாடு விநோத மாயிருப்பினும் அதன் அடிப்படை நோக்கம் பெரிதும் மகிழ்ந்து பாராட்டத் தக்கதாகும். இத் திருக்கோவிலுக் குரிய நிலபுலன்கள் எங்கெங்கு எவ்வளவு இருக்கின்றன என்பது ஆண்டுதோறும் அறுவடைக் காலமான மார்கழியில் ஊரவரெல்லாம் அறியப் படிக்கப் பெறுவதால் தவறுகள் நிகழ

வொட்டாமல் தடுத்துவிடுதல் ஓரளவு சாத்தியமே யன்றோ?

ஆண்டு தோறும் வரும் விநாயக சதுர்த்தியே இவ்வூரின் பெருந்திருநாள் ஆகும். இது பத்து நாட் பெருவிழா. பிள்ளையார் சதுர்த்திக்கு ஒன்பது நாள் முன்னதாகக் காப்புக் கட்டி, கொடியேற்றம்செய்து திருநாள் தொடக்கம் பெறும். இரண்டாம் நாளி லிருந்து ஒவ்வொரு நாளும் காலைவிழா நடைபெறும். கற்பகப் பிள்ளையார் வெள்ளிக் கேடகத்தில் உலாப் போந்தருள்வார். ஒவ்வொருநாளும் இரவு கணேசப் பெருமான் பல்வேறு வாகனங்களில் அமர்ந்து திருவீதி பவனி வருவார். முதல் நாள் வெள்ளி மூஷிக வாகனத்திலும், இரண்டாம் நாள் சிம்ம வாகனத்திலும், மூன்றும் நாள் பூத வாகனத்திலும், நான்காம் நாள், கமல வாகனத்திலும், ஐந்தாம் நாள் வெள்ளி ரிஷப வாகனத்திலும், ஆறும்நாள் கஜமுகாசுர சம்காரம்வரை வெள்ளி யானை வாக னத்திலும், பின்னர் தங்கப் பெருச்சாளி வாகனத் திலும், ஏழாம் நாள் வெள்ளி மயில் வாகனத்திலும், எட்டாம் நாள் குதிரை வாகனத்திலும், ஒன்பதாம் நாள் தேரிலும் வேழமுகப் பெருமான் வீற்றிருந்து வலம் வந்தருள்வார். பத்தாம் நாட் காலையில் தீர்த் தவாரி இரவு நிகழும். ஐம்பெரும் கடவுளரும் தத்தமக் குரிய, தங்க, வெள்ளி வாகனங்களில் எழுந்தருளித் திருவுலா வருவர்.

சதுர்த்தி விரதம் மேற்கொள்ளுபவர்களும், சதுர்த்தி விரதம் நிறைவு செய்துகொள்ளுபவர் களும் நூற்றுக்கணக்காக வந்து ஆனைமுகப் பெம்மான் திருச்சந்நிதியிலே நாள்முழுதும் உண்ணு நோன்பிருந்து கும்பஜபம் நடாத்தி அபிஷேகம் பெற்றுக்கொள்ளுவதன் மூலம் விரத பலனை

யடைந்து அவனருளுக்குப் பாத்திர ராகி வருகின்றார்கள்.

இவை யன்றி இவ்வூர்க் கிராம தேவதையான கொங்கு நாச்சியம்மனின் எழுந்தருளும் மூர்த்தி இந்தக் கோவிலுள் மருதங்குடி நாயனர் மகாமண்டபத்தில் இருந்தருளுகிறது. அந்த அம்மன் செவ்வாய்த் திருவிழா ஒவ்வோராண்டும் வைகாசி மாதத்தில் நடைபெறும். இதுவும் பத்துநாள் விழாவே. வைகாசி மாதம் மூன்றும் செவ்வாய்க் கிழமைக்கு எட்டு நாள் முன்னர் வருகிற திங்கட் கிழமையில் காப்புக் கட்டித் திருவிழா தொடக்கம் பெறும். எட்டாம் நாள் வரை அம்மன், பிள்ளையார் பட்டிக் கோவில் திருவீதியையே வலம்வந்தருள் வாள். ஒன்பதாம் நாளான செவ்வாய்க்கிழமை தேரேறிக் கொங்கு நாச்சியம்மன் கோவிலுக்குப் போய் அன்றிரவு அங்கு தங்கி மறுநாள் புதன் கிழமை காலை பிள்ளையார்பட்டி ஊருக்குத் திரும்பி வந்தருள்வாள். புதன்கிழமை இரவு பல்லக்குடன் பத்துநாள் செவ்வாய்த் திருவிழா நிறைவெய்தும்.

*

# 4. பிள்ளையார் பெருமை

உலகம் யாவையும் படைத்துக் காத்துத் துடைக்கும் முழுமுதல் இறைவன் ஒருவனே. அவனை இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று நம் போன்றவர்கள் எளிதில் உணர மாட்டோம். ஆனாலும் உண்மை உணர்ந்த, அருள்பழுத்த நெஞ்சினர்கள் அவனுக்கு அவனருளாலே ஆயிர மாயிரம் திருப்பெயரையும், திருவுருவத்தையும் தந்து நாமுய்ய வழி வகுத்தருளியிருக்கிறார்கள். அவை யனைத்தும் அறவோர் தியானத்தில் முளைத்தவை. அவற்றிற் கெல்லாம் தத்துவப் படியும், ஆகம முறையிலும், சிற்ப ரீதியிலும் தியான ஸ்லோகங்கள் எண்ணற்றவை நமக்கு உண்டு. அந்நெறி பற்றியே நமது தெய்வத் திருவுருவங்கள் இன்றும் சமைக்கப் பெறுகின்றன.

திருவுருவ அமைதிகளைப் புலப்படுத்த தியான ஸ்லோகங்கள் இருப்பதைப் போலவே அவன் அருளைப் பெறுவதற்கு மந்திரங்களும் பல உள. வேறு வேறு உருவத்தையும், வேறு வேறு திருப் பெயரையும் மனத்துட் கொண்டு பல பாவனைகளில் அந்த ஒருவனை வழிபடுவதால் மந்திரங்களும் பல ஆயின. எனினும் எல்லா மந்திரங்களும் பிரணவ

கோஷமாகிய "ஓம்" ஒலியை முதலாகக் கொண்டே ஓதப்பெறுகின்றன. அங்ஙனமே எந்த மூர்த்தத்தைப் பூசித்தாலும் பிரணவப் பொருளாகிய பிள்ளையாரை முதலில் வணங்கி மேற்செல்வதே நமது மரபு.

பிள்ளையார், மூத்ததிருப் பிள்ளையார், கணபதி, கணேசன், கணநாதன், விநாயகன், விக்கின விநாயகன், விக்கினராஜன், விக்கினேச்சுரன், கஜமுகன், கரிமுகன், யானைமுகன், வேழமுகன், தும்பிக்கையான், அத்திமுகன், ஐங்கரன், அங்குச பாசன்,முன்னவன்,ஓங்காரன், பிரணவப்பொருள், கற்பகமூர்த்தி, கற்பகவிநாயகன், கற்பகப் பிள்ளையார், முதலான பல பொதுப்பெயர்களைக் கொண்டருளும் பெருமான் இடங்கட்குத் தக்கபடி பலப் பல காரணங்களால் சிறப்புப் பெயர்கள் பலவற்றைத் தாங்கியருள்வதை நாம் நன்கறிவோம்.

இந்த மூர்த்தத்தின் உருவ தத்துவத்தை சிறிது சிந்தித்துப் பார்த்தாலும் அதன் அருமை நன்கு புலப்படும். பிள்ளையாரை ஞானத்தின் அதிதேவதை என்பர் நூலோர். யானைத் தலையே அதற்குச் சான்று. ஓங்கார ஒலிக்குரிய வரிவடிவமான "ஓம்" என்பதைக் கட்புலனாகும்படி காட்ட யானைத்தலையே பெரிதும் ஏற்றதா யிருக்கிறது. வலப்புறத் தந்தம் ஒடிந்ததான அமைதியில் காட்டப்பெறுவதன் மூலம் ஒ என்ற எழுத்தின் தொடக்கச் சுழி கிடைத்துவிடுகிறது. அங்கிருந்து மேல் நோக்கி வலஞ்சுழித்து இடக்காதுவரைச் சென்று, வளைந்த இடத்தந்தத்தின் வழியாகக் கீழ்நோக்கித் துதிக்கை நுனிவரைக் கோடிட்டால் ஒ என்ற வரிவடிவம் தோன்றிவிடக் காண்போம். கையில் உள்ள மோதகம் 'ம்' என்ற வரிவடிவத்தைச் சுட்டுகிறது.

பிள்ளையார்பட்டிப் பெருமான் வலம்புரிப்பிள்ளையாராயிருப்பதால், பெரும்பாலாக மற்ற இடங்களில் உள்ள மூர்த்தங்களைவிட விளக்கமாக இவ்வுண்மையை (ஓங்கார சொரூபத்தை)ப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

இனி வேறிடங்களில் சாதாரணமாகக் காணப்பெறாத சிறப்பமைதிகள் இங்கு என்ன என்பதைச் சிறிது காண்போம்.

(1) இங்கு பெருமானின் துதிக்கை வலம் சுழித்ததாக அமைந்திருப்பது;

(2) சாதாரணமாக மற்ற இடங்களில் இருப்பதைப் போல நான்கு கைகள் இல்லாமல் இரண்டு கரங்களைக் கொண்டிலங்குவது;

(3) அங்குச பாசங்கள் இல்லாமல் விளங்குவது;

(4) வயிறு ஆசனத்தில் படியாமல் 'அர்த்த பத்ம' ஆசனம் போன்று கால்கள் மடிந்திருக்க அமர்ந்தருள்வது;

(5) இடக்கரத்தை இடையில் நாட்டிப் பெருமிதக் கோலம் தோன்றப் பொலிவது;

(6) வலக்கரத்தில் மோதகம் தாங்கியருள்வது;

ஆகிய இவை பிள்ளையார்பட்டிப் பெருமானிடம் காணப்பெறும் சிறப்பமைதிகள். இவற்றால் நாம் உணரக்கூடியது—உணர வேண்டியது ஒன்று. **பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டில் தோன்றிய ஆதி நாளிலேயே இந்த மூர்த்தம் அமைக்கப்பெற்றிருக்கிறது என்ற உண்மைதான் அது.** சிற்பக்கலை உணர்ந்தவர்களும், சிற்பத்துறை ஆராய்ச்சியாளரும் இதை மறுக்கமாட்டார்கள். இந்தச் சிறப்பியல்பை அறிந்துகொண்டு மேலே செல்வோம்.

விநாயகன் என்ற சொல்லுக்கு ஒப்புயர்வு இல்லாதவன்; "தன் அலாது ஒரு பொருள் தனக்கு மேலிலான்" என்பது பொருளாகும். அதாவது அண்ட சராசரம் அனைத்திற்கும் தானே தனித்தலைவன் என்பதாம். அனைத்திற்கும் முதலாய் தோன்றியது நாதமே என்பதைப் பண்டைய மெய்ஞ்ஞானிகளைப் போன்றே இன்றைய விஞ் ஞானிகளும் நம்புகின்றனர். நாத தத்துவத்திற்கே ஆதாரச் சொல் அல்லது மூல ஒலி "ஓம்" என்பதாகும். அந்த ஒலிக்கு முற்றறிவுடைய நமது பெரியோர்கள் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் னேயே உலகம் போற்ற வரிவடிவை அற்புதமாக அமைத்தனர். அந்த வரிவடிவத்தை மனத்துட் கொண்டு அமைக்கப் பெற்றதே இந்த உருவடிவம். பரம்பொருளிலிருந்து முதலில் வெளிப்பட்டது ஒலி. அந்த ஒலி (அதாவது பிரணவ) உருவுடன் விளங் குவதால் பிள்ளையார், மூத்ததிருப்பிள்ளையார் ஓங் காரப் பெருமான், பிரணவ சொரூபி என்றெல்லாம் போற்றப் பெறுகிறார்.

சகல கணங்கட்கும் தலைவனாய் விளங்கும் உண்மையை உணர்த்த கணபதி, கணேசன், கணநாதன் முதலிய திருப்பெயர்களைத் தாங்கி யருளுகிறார்.

தம்மை உணர்ந்து பணிந்தோர்க்கு இடையூறு களை நீக்கியும், அல்லாதார்க்கு ஆக்கியும் அருள் சுரப்பதால் விக்கினேச்சுரன், விக்கினராஜன் விக்கினவிநாயகன் என்றெல்லாம் பாராட்டப் பெறுகிறார்.

அவருடைய பெருவயிறு (லம்போதரம்) சர்வாண்டங்களையும் தன்னுள் அடக்கிக்கொண் டிருக்கின்ற பெருமையையும், மோதகம் ஏந்தும்

கரம் அகிலத்தைத் தாங்கிப் புரக்கும் அருமையை யும் உணர்த்துவன ஆம்.

நெற்றிக்கண், கங்கை, சடைமுடி, இளம்பிறை, இண்டை, முதலான சிவனுக்குரிய அங்கங்கள் அனைத்தையும் பிள்ளையார்க்கும் உரியதாகப் பேசு வது தொன்று தொட்ட மரபு. இதிலிருந்தே சிவன் வேறு பிள்ளையார் வேறு என்று சொல்லமுடியாத அபேத உண்மை நன்கு புலனாகின்றது, இல்லையா?

விநாயகப் பிரபாவம் அதாவது பிள்ளையார் பெருமை பேசரியதாகும். எனவே பேச்சிறந்த பூரணமாம் அவனருளாலே அவன் தாள்வணங்கி அவனருளுக்குப் பாத்திரராக முயல்வோமாக.

*

பிற்சேர்க்கை–1

# கல்வெட்டுக்கள்

*[பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோவிலுள் பின்வரும் கல்வெட்டுக்கள் 11 உள்ளன. சென்னை கல்வெட்டிலாகாத் துணை ஆய்வாளர் ஸ்ரீ. ஏ. எஸ். இராமநாதையர் 1936ம் வரு மார்ச்சுமீ 1௳ முதல் 4௳ வரை தங்கியிருந்து படி எடுத்துக்கொண்டு போயிருக்கிறார். ஆயினும் இன்னும் இவை வெளியாகவில்லை.]*

## கல்வெட்டு எண் 1

**திருவீங்கைக்குடி மகாதேவர் கருவறைத் திருவாயிலுக்கு இடபால் சுவரில் உள்ளது:**

**வரி: 27—2=25 ]** **[காலம்: கி. பி. 1220**

*ஸ்வஸ்திஸ்ரீ கோ மாறு பந்மரான திரிபு*
*வனச்சக்கரவத்திகள் சோ[ணா]டு வ[ழ]ங்கி*
*யருளிய ஸ்ரீ ஸுந்தரபாண்டிய தேவற்கு*
*யாண்டு பதினென்று மதினெதிராமாண்டு*
*கேரள சிங்கவளநாட்டுக் கீழ்க்குண்டாற்று*
*த்திருவீங்க[ய்]குடி நாயனர் கோயில் [1]தேவ*
*கன்மியும் ஸ்ரீ காரியஞ் செய்வார்களுக்கு*
*ம் ஸ்ரீ மஹேச்வரக் கண்காணி செ[ய்]வார்களு*
*க்கும் கண்டு இநாயனர் கோயில் தேசி[வி]ந*

1 தேவகன்மி=கோவில் பூசகர்; ஸ்ரீ காரியம்=மணியம் போன்ற கோவில் நிர்வாக அதிகாரிகள்; மஹேச்வரக் கண்காணி செய்வார்=கோவில் தரும கருத்தர்கள்.

யகப் பிள்ளையாற்க்கு [2] காங்கேயன் [ஸ]ந்திக்கு
[3] நித்தல் நிமிந்தமாக திருவமுதுபடி செல்வ
தாக திருவீங்கை குடிப்பால் குன்றவய
லில் முன்பு இப்பிள்ளையாற்கு இவ்வயலில் [4] ஊ
டுதடிம் இறுப்பதாகக் கல்வெட்டிக் குடுத்த
[5] குடிதாங்கிப்படி நிலம் இரண்டும்
உட்பட குன்ற வயலில் [6] வளையிற்ச் சுற்று முற்றும்
நான்கெல்லையும் முற்றும் அதளையூர் ஞட்டும்ப
டி கடமை குடிமை இறுப்பதாகவும் நாடேன்ற வரி
களும் அச்சு வரியும் மற்றும் எப்பேற்ப[ட்]டனவும்
திருவீங்கைக் குடியில் [7] புரவால் வந்ததில் ஏழிலெ
ான்று இறுக்கக் கடவதாகவும். கன்மமும் கண்
காணிக் கணக்கும் புள்ளிக் கணக்கும் தங்கள் கண
க்கிட்டே செய்வித்துக் கொள்வார்களாக [செ]
ய்து கொடுத்தோம் கண்டன் உதையஞ் செய்தா
ஞன காங்கேயனென்.

........................(இருவரிகள்சேதம்)........................

..........................................................................

---

2 முடிவில் கையொப்பமிட்டிருப்பவன் தேசிவிநாயகப் பிள்ளையாருக்கு நித்தியப்படி ஒரு காலம் ஏற்படுத்தி அது தன்பெயரால் விளங்க "காங்கேயன் சந்தி" என்று பெயரிட்டுமிருக்கிறன். இந்தக் கண்டன் உதையஞ் செய்தாஞன காங்கேயன் என்பான் குன்றக் குடிக்கு வடக்கில் உள்ள நேமம் என்னும் ஊரினன். சுந்தரபாண் டியனின் பிராந்திய அதிகாரிகளுள் குறிப்பிடத்தக்கவ னிவன். இவனுடைய பெயராலும் ஒப்பத்துடனும் பல கல்வெட்டுக்கள் காணப்பெறுகின்றன. (P. S. 1. Nos. 251. 253, 254 & etc)

3 நித்தியப்படிக் கட்டளையாக.

4 நெல்வயல் தாக்கு

5 குடிதாங்கிக் கோல் என்பது பழைய காலத்தில் இருந்த ஒரு அளவு கோல்.

6 வளையிற் சுற்று = எல்லை.

7 புரவால் = நன்செய் மூலமாய்.

## கல்வெட்டு எண் 2

**தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரை வாயி
லுக்கு இடபால் பத்திச் சுவரில் உள்ளது:**

**வரி : 11 ]** **[காலம் : கி. பி. 1116**

*ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ வல்லப
தேவற்கு யாண்டு உ௰உ வது கேரள சிங்கவள
நாட்டுக் கீழ்குண்டாற்று மருதங்குடி வல்லக்கூற்
றுவன் சிறுகு
டிகாடன்னுகேரளன் காடனும் கேரளன் பொன்
னுச்சனும் இம்
மூவோமும் என்மகன் காடன் கேரளன் சிருவயல்
வல்லக்கூற்றுவனை வெ
ய்யரையன்னுக்காகச் சென்றுபட்ட காடன்கேர
ளனை ஒருங்
கிதிருவீங்கைகுடிமஹாதேவற்கு திருஅமுதுபடிக்கு
சிராவ
யல்வயலிலே இரண்டுமாச் செய்விட்டு இப்பகை
ஒருங்கினமை
தீர்மானித்து கல்லிலும் வெட்டிக்கொடுத்தேன்
சிறுகுடி க[ா]டனும் கேரளன் காடனும், கேரளன்
பொன்னுச்சனு இம்மூவோம் இ
து பன்மாஹேச்வர ரக்ஷை.*

---

மருதங்குடி வல்லக்கூற்றுவன் மகன் காடன் கேரளனை சிருவயல் வல்லக் கூற்றுவன், வெய்யரையனுக்குச் சார்பாகச் சென்ற பொழுது அவனைக் கொன்ற சிறுகுடிகாடன், கேரளன்காடன், கேரளன்பொன்னுச்சன், ஆகிய மூவருடனும் கொண்ட பகை தீர திருவீங்கைக்குடி மஹா தேவர்க்த இரண்டு மாச் செய் (அபராதமாக) விட்ட செய்தி இதிலிருந்து கிடைக்கிறது. பெரும்பாலான தர்ம சாசனம், பன்மாஹேச்வர ரக்ஷை (எல்லாப் பெருங்கடவுளரின் காப்பு) என்றே முற்றுப் பெறுகின்றன.

# கல்வெட்டு எண் 3

**திருவீங்கைக்குடி மகாதேவர் கருவறைத் திரு வாயிலுக்கு இடபால் வடக்குச் சுவரில் உள்ளது:**

**வரி: 24]** **[காலம் கி. பி. 1237**

*ஸ்ரீ கோமாற பன்மரான*
*திரிபுவனச் சக்கரவத்திகள் ே[ச]ாணு*
*டு வழங்கியருளிய சுந்தர பாண்டிய*
*தேவற்கு இயாண்டு இருவதாவ (ததவ) தி*
*னெதிர்[1] இரண்டாவது கும்பநாயற்று*
*பதினாருந்தியதி நான் காங்கேயன் ஓலை*
*மருதங்குடி வியாபாரிகுன்றன் உடையா*
*ன் உள்ளிட்டாரும்* நியமித்துசோலைபெ*
*ற்றான் உள்ளிட்டாரும் அளகாபுரி வம்பெ*
*வரிவேதனமுடையான் உள்ளிட்டா*
*ரும்கண்டு மருதங்குடி வயலில்[2] கூற்*
*றுவர் பற்றில் விலை கொண்டு புதுப்ப*
*ற்றாக கடமையும் காசும் இறுத்*
*துவருகிற[3] பட்டோலைப்படி நில*
*த்துக்கு அளகாபுரி வியாபாரிகள்*
*அதிகரந்தென்கரைப் பற்றில் விலை*
*கொண்டு புதுபற்றாக இறுத்து வரு*
*கிற[4] வரிசைப்படி கடமையும் அச்சுவரி*
*உள்ளிட்ட வரிகளுக்கு மாத்தால் அ*

---

1 "இரண்டாவது கும்பநாயற்று" என்று குறிக்கப்பெறுவதால் இவன் மாசி மாதம் பிற்பகுதியில் பிறந்தவனாதல் வேண்டும்.

* நியமத்து என்பது நியமித்து என்று பிழையாகக் கல்வெட்டில் காணப் பெறுகிறது.

2 கூற்றுவர்பற்று = நாட்டுக்குரிமையான பகுதி.

3 பட்டோலை = தற்காலத்தில் "பட்டா" என வழங்குவது போன்ற சாதனம்.

4 வரிசை = வரி விதிப்பு.

இந்த ஓலையை விடுத்தவன் முதற்கல்வெட்டில் கண்ட காங்கேயனே.

ரைப்பழங்காசும் முன்பு இறுத்து
வருகிறபடியிலே இவ்வாண்டு முதல் சந்
திராதித்தவற் இறுக்க. இப்படிக்கு காங்கேயந்
எழுத்து. இப்படிக்கு செய்திய
ராயர் எழுத்து.

## கல்வெட்டு எண் 4

தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரைப்
பத்திச் சுவரில் இடபால் உள்ளது:

வரி: 12] [காலம்: கி. பி. 1225

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்ரவத்திகள்
ஸ்ரீ சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய
தேவக்குயாண்டு[ ௯ ]வது கும்ப நாயற்று யிஎ நாள்
கேரளசிங்கவளநாட்டு அதளையூர் நாட்டுதேனாற்றுப்
போக்குºநியமித்து அரசன் ஆளவந்தானநாராதொ
ங்கராயந் பெண்டுகளில் உயவந்தாந் ஆண்டாள் திரு
வீங்
கைக்குடி நாயனர், திருமருதங்குடிநாயனர்[ க் ]கு
சிவாத்திரய
பூசை என்நுதமமாக பூசை[ க் ]கு வேண்டும் திருஅமு
துக்கும் வேண்டு
ம்†விஞ்ஜங்களுக்குமாகநான்விலைகொண்டுநிலம்
புழை
க்குடிவயலில் புறக்கரை கநியந் வயக்கல் சிவராத்த
ரய்க்கு

---

இரு சிவபெருமான்கட்கும், சிவராத்திரி வழிபாட்டிற்காக தேனாற்றுக் கரையில் உள்ள நேமம் என்னும் ஊரில் இருந்த அரசன் ஆளவந்தான் (அரசப் பிரதிநிதி?) ஆன நாராதொங்கராயன் (மாறகொங்கராயன்?) மனைவிமார்களுள் உய்யவந்தான் ஆண்டாள் என்பவள் கனியன் வயலைக் கொடுத்திருக்கும் செய்தி இதனால் புலனாகிறது.

º 'நியமத்து' என்று படிக்க, † வியஞ்ஜனங்களுக்கு என்று படிக்க.

சந்திராதித்ரவல் செல்விதாக கல்வெட்டிக் குடுத்
தேன் கா[லி]
ங்கராயன் னென் எழுத்து இது பன்மாஹேச்வர
ரக்ஷை.

## கல்வெட்டு எண் 5

தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரைத் தூணில் உள்ளது:
வரி : 73] [காலம் : கி. பி. 1305

### முதலிரண்டு பட்டத்தில்

ஸ்வஸ்திஸ்ரீ கோமாறு
பன்மரான திருபுவ
ன சக்கரவத்திகள் எம்மண்
டலமுங் கொண்டருளியஸ்ரீ
குலசேகரதேவற்குயாண்
டு ௩௰௯வது வைகாசிமீ ௧௯
மருதங்குடியான இராசநா
ராயணபுரத்து உடையார்தி
ருவீங்கைச்வரமுடையநாய
னார் கோயிலில் தேசிவின
யகப் பிள்ளையாற்க்கு திரு
பண்ணிகாரம் பிட்டமுதுே
சவிக்க [1] தியாகவினோதன்
திருமடத்தி[ல்] இருக்கும் வாம
தேவரான செயத்துவாய்

### மூன்றும் பட்டத்தில்

த்தா நியமம்
உள்ளிட்டப
ற்று நாட்ட
வர் பக்கல்
முன்னாள் இரு
பத்திரண்ட
ாவது நாட்டு
இறையிலி.
யாக நடப்[பு]
கழித்துதந்த
மருதங்குடிப்
பால் முள்ளல
ங்குடி வயலில்
தலான் பெரு
ஞ்சேயான பி

1 தியாக வினோதன் திருமடம் என்பது கோனேரின்மை கொண்டான் என்ற சிறப்புப் பெயரால் விளங்குபவனும் 9-வது கல்வெட்டுக் குரியவனுமான மூன்றும் குலோத்துங்கன் பெயரால் அமைந்த கோவிலின் பெயர். அக்கோவில் தருமகருத்தர்களில் ஒருவர் வாமதேவர். இது 7-ம் கல்வெட்டால் உறுதியும் தெளிவும்பெறு கிறது.

| நான்காம் பட்டத்தில் | ஐந்தாம் பட்டத்தில் | ஆறும் பட்டத்தில் |
|---|---|---|
| ட்டுவன் தா [ ந் ] | ம் இட்டுச | எழுத்து |
| பெருநான்கெ | ந்திராதித்தர் | நாட்டுக்கண |
| ல்லைக்குட் | வரை செ | க்கு வேண்ட |
| பட்ட [2] தடிமு | ல்வதாகக | வளந்தான் |
| ழுதும் இப்பி | ல்வி லும்வெ | எழுத்து |
| ள்ளையார்க்குதி | சம்பி லும் | நாட்டுக்க |
| ருப்பண்ணி | வெட்டிகொ | ணக்குமயிலே |
| காரமும் பிட்ட | ள்ளக் இப் | லறும்பெரு |
| மு[து]ம்செய்விக்க | படிக்கு நாட் | மாள் எழுத்து. |
| திருநாயற்றுகி | டுக்கு இசைந் | |
| ழமை தோ | தநாட்டவர் | |
| றும் நாழுழி | சொற்படி | |
| அரிசியும்க | க்கு நாட்ட | |
| ருப்புக்கட்டி | க்கணக்கு | |
| தேங்காய் | வீரபாண் | |
| உள்ளிட்ட | டிய [3] மூவேந் | |
| விஞ்சனமு | தவேளான். | |

2 தடி = துண்டு நிலம்.

3 மூவேந்த வேளான் என்பது நிர்வாக அதிகாரத்துடன் கூடிய ஊழியர்கட்கு வழங்கும் ஒரு பட்டம்.

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் விநாயகப் பெருமானுக்கு கருப்பட்டிப் பணிகாரமும், பிட்டும் நெய்வேத்தியம் செய்வதற்காக எவ்வித வரியும் செலுத்த வேண்டாத ஒரு நிலம் கொடுத்த செய்தி இதனுல் புலனுகிறது.

## கல்வெட்டு எண் 6

தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரைப்
பத்திச் சுவரில் இடபால் உள்ளது:

வரி : 14 ] [காலம் : கி. பி. 1292

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவநச்சக்கரவத்திகள் ஸ்ரீ
விக்கிர[ம]பாண்டிய தேவற்க்கு யாண்டு ௰உவ
து கேரளசிங்கவளநாட்டு கீழ்குண்டாற்று
திருவீங்கைக்குடி மஹாதேவற்க்கு[1] திருப்பளியே
றுநாச்சியார் மருதங்குடி நாயநார்க்கு
எழுந்தருளி விச்சதிருப்பள்ளி யேறுநாச்சி
யார்க்கு செயங்கொண்ட கொடிபெருங்
தருவில் வியாபாரி ந(ா)ண்ணியுய வந்தாங்நா
ன் எழுந்தரு(ள்)ளிவிச்சநாச்சியார்க்குதிருவமுதுப
டிக்கு[2] கொண்டுவிட்ட நிலமாவது பழம்தேவதா
நமான (கிணற்றும்) கிணற்றங் செயும் தெற்கில்மூ
வேந்தன்...........[3]வயக்(கி) [க]லும் ஆளவுடையாழ்
வயக்க
லும் மருதங்குடி...........வயலில் அப்பியவயக்கலும்
......................... (ஒருவரி சேதம்).........................

## கல்வெட்டு எண் 7

திருவீங்கைக்குடி மகாதேவர் கரு
வறை வடக்குச் சுவரில் உள்ளது:

வரி : 30—3 = 27 ] [காலம் : கி. பி. 1270

ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகோமாறுபன்மரான திரிபுவநச்சக்
கரவத்திகளெம்மண்டலமுங் கொண்டருளிய
ஸ்ரீ குலசேகர தேவற்கு[யாண்டு]நாலாவது கேரள
சிங்கவளநா

---

1. பள்ளியறை அம்மன் ; 2. விலக்கு வாங்கிவிட்ட நிலம்.
2. வயல் = வயல்தொகுதி ; வயக்கல் அவற்றுள் ஒரு பகுதி.

*ட்டுக்கீழ் குண்டாற்று மருதங்குடியான இராசநாரா*
*யண*
*புரத்து உடையார் திருவீங்கைச்சுரமுடைய நாயநார்*
*கோயிற்*[1] *தேவகன்மிகள் சீகாரியஞ் செய்வார்கள்*
*ஸ்ரீ மாஹேற[ச்வர]*
*க்கண்காணி செய்வார்களோம் இந்நாயனர்*
[2]*திருமடை விளாகத்து*
[3]*வயிராகிகளில் திருச்சிற்றம்பல வைராகி உள்ளிட்*
*டாற்கு இந்நாயனு*
*ர்*[4]*தேவதான மருதங்குடி வயலில்* [5] *குளங்கோவை*
*வரவை ஊடும் இத*
*ன்வட[க்]கு ஆளடை வயக்கல்* [6] *தடியிரண்டும்*
*செங்கழு நீர்க்குழி இறை[த்]து கா*
*லம் வாரமுங் கோடைமு(ன்)[ற்]றினல் கிணறும்*
*இதன் மேலை அறட்டி வயகல்*
*(வயகல்)* [7] *வரவைகளும் இதன் வட[க்]கு பனைஞ்*
*செயும் இவையிற்றுக்கு காலமூன்*
*றிலொன்றுங் கோடை நாலிலொன்றும் இதன்*
*வடக்கு குடிபறுபதம் யொன்று நீக்கி*

---

1 கோயிற் பூசகர்கள், நிர்வாக அதிகாரிகள், கோவில் தரும கருத்தர் கள் ஆகிய நாங்கள்.

2 திருமடவளாகம் = கோவிலைச்சுற்றியுள்ள வீதி;கோவில் ஊழியர்கள் குடியிருக்கும் கோவிலுக்கு அணித்தான பகுதி.

3 வயிராவி = தன்னுயிரைக் கொடுத்தும் கோவிலுக்கு உரியனவற்றை காப்பவன். இவர்கள் வீரமுஷ்டி வீரபத்திரர் என்றும் கல்வெட்டுக் களில் குறிக்கப்பெறுகின்றனர்.

4 தேவதானம் = மன்னரால் கோவிலுக்குத் தானமாக அளிக்கப்பெற்ற இறையிலி நிலம்.

5 குளங்கோவை வரவை ஊடு = ஏரிப்பாய்ச்சல் உள்ள நெல்விளையும் வயல் தாக்கு.

6 தடி = துண்டு நிலம்,

7 பண்டாரம் = பொக்கிஷம்; களஞ்சியம்.

ப்பெருங்கரையுள் [6] தடிநாலும் மூருணிவெட்டு[க்]
குங்கிணறு வெட்டு மிவையிற்றுக்கு செய்
ஒன்(ற)[றுக்]கு அமரத்தங்கொவை கொளுமிவை
யி[ற்]றுக்கு [7]பண்டாரத்திலே இடுவதாகவும்பனை
ஞ்செய்யு மேற்தலை 2-பாதில் [6] தடி 2-னல் புஞ்
செயில் மதிள்
வைத்துக்கொள்வராகவும் இவையிற்று[க்]
கு இவா[ட்]டை தைமீ தவணை வைத்து [7]பண்டா
ரத்துக்கு வாங்கின விராகன் சம-இப்பொன்
நாற்பதுக்கு இவ
கைபடியுள்[ள]நிலங்களுங் கிணறுகளு[ம்] ஊரணி
களும் இவ்வாட்டை தைமாதமுதல் சந்திராதித்ர
வரை
[8]குடி நீங்காகாராண்மையாக உருவாஞக கல்வெட்
டிக்குடு[த்]தோம்தே[வ]கன்மிகள்சீகாரிய
ஞ்செய்வார்கள் சீமாஹேச்வரக் கண்காணி
செய்வார் களோம் திருச்சிற்றம்பலவ
யிராகி உ[ள்]ளிட்டார்க்கு பிள்ளையார் நலமங்கை
பாகரான இராச நாராயண[9] பிரமாதிரா

---

8 குடிநீங்காக் காராண்மை = வமிச பரம்பரையாக வாரத்திற்கு உழுது பயிர்செய்யும் உரிமை.

9 பிரமாதிராயன்—அந்தண அமைச்சர்க்குரிய ஒரு பட்டம். இவர் அந்நாளில் கோவில் மணியம் போன்ற ஒரு நிர்வாக அதிகாரியாக இருந்திருக்க வேண்டும். இவருடைய இயர்பெயர் நலமங்கைபாகன் என்பது இறுதிக்கை பொய்த்தால் வெளிப்படுகிறது. இராச நாராயணபுரத்து நிர்வாக அதிகாரி ஆனதால் இராசநாராயண பிரமாதிராயன் என்று வழங்கி வந்திருக்கலாம்.

கோவில் வபிராவிகளுள் திருச்சிற்றம்பல வயிராகி பரம்பரையின ருக்கு கோவில் பொக்கிஷத்திற்கு 40 பொன் வராகன் பெற்றுக் கொண்டு குறிப்பிட்ட நிலங்களை குறிப்பிட்ட வாரம் தர வேண்டு மென்று நிர்ணயித்துக் காராண் கிழமையாகக் கொடுத்திருப்பதுடன் புன் செய்யில் மதிள் அமைத்துக் கொள்ளவும் அனுமதித் திருப்பது இக் கல்வெட்டால் புலனுகிறது.

யன் எழுத்து.......மேற்படி பட்டனை சுந்தரபாண்
டியபட்டன் எழுத்து திருச்சிற்றம்
பலமுடையான் சொக்கநாயகன் எழு[த்]துதிருத்
தணியாண்டான் தேசமிக்கா
............................(ஒருவரி சேதம்)......................
......................து மேற்படிநல் மங்கைபாகன்எழுத்து
....................யனுர் தியாக(வு)[வி]னேதன் திருமட
[த்து]ஸ்ரீ
மஹேச்வரக் கண்காணி செய்வார்களில் வாமதே
வரான செயத்துலாயதார்..............ம்மைக..............
............................(இருவரிசேதம்)......................
......................................................................

## கல்வெட்டு எண். 8

திருவீங்கைக்குடி மகாதேவர் கருவறைத்
திருவாயிலுக்கு வலபால் சுவரில் உள்ளது:

வரி: 25 ] [ காலம்: 1284.

ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமேற்கித்துக்குமேல் திரிபுவன
சக்ரவத்
திகள் எம்மண்டலமுங் கொண்டருளிய ஸ்ரீகுலே
சகரதேவற்கு யாண்டு ய௲ வது மாசி மாதம்கேர
ளசிங்கவளநாட்டு [1]அதளையூர் நாட்டு நாட்
டவரும், [2]கல்வாயில் நாட்டுக் கீழ்வகை நாட்டு
நாட்டவரும்,[3] கீழ்[க்]குண்டாற்று நாட்டவரும்[4] காந
நாட்டு(ணென்) [5]காரிகுடி ஐஞ்நூற்றுவப் பெருங்செ
தருவில் நகரத்தாற்குப் [6]பிடிபாடு பண்ணிக்கு
டுத்த பரிசாவது இவர்கள் கீழ்[க்] குண்டாற்றுமரு
தங்குடி[7] ஊரார் பக்கல் விலை கொண்டுடை
டய மருதங்குடி வயல் முன்னாள் அளந்த
புரவுக்கு [8]வரிசை நீக்கி நாலு மாப்புரவுக்

கு நாட்டு விழுக்காட்டுப்படி இறை குடிமை
கொள்ளக் கடவதாகவும், இப்படிக்கு இப்பற்
றுக்கு இவ்வூர் தாங்களே கோயிலிற் திருமலை
யிலே கல்வெட்டிக்கொள்வதாகச் சம்மதி
த்துப்[6] பிடிபாடு பண்ணிக் குடுத்தோம் அத
ளையூர் நாட்டு நாட்டவரும் கல்வாயில்நா
ட்டு நாட்டவரும் கீழ்குண்டாற்று நாட்டவ
வரும் ஐஞ்ஞூற்றுவப் பெருந் தெருவில்
நகரத்தாற்கு.[9] மாதவராயர் தற்குறிக்கும்
இருங்கோளர் தற்குறிக்கும் நிலகங்கரைய
ர்தற்குறிக்கும்[10] மாட்(டெ)டறிந்ததைக்கு தட
கைய...........த்து மெய்ய ரெழுத்து
இவை[11] வல்லன் பெரியான் எழுத்து

---

1 அதளையூர் நாடு என்பது கீழ்க்குண்டாற்று நாட்டிலிருந்து பிரிந்த ஒரு பகுதியாக வேண்டும். காரைக்குடியை அடுத்த கழநிவாயில் முதலிய ஊர்கள் இதில் அடங்கும். (P. S. I. No. 438) இங்குள்ள பெருமாள் கோவில் ஏழகப்பெருமாள் விண்ணகரம் என்று கல்வெட்டுக்களால் புலப்படுத்தப் பெறுகிறது. ஏழகப்படை என்று 12ஆம் நூற்றுண்டில் வான்புகழ் படைத்திருந்த பெரும்படை இப்பகுதியைச் சார்ந்ததே. இங்கு நகரத்தார்கள் சில காலம் வசித்திருக்கிறுர்கள். ''ஏழகப் பெருந்தெருவான வீரபாண்டிய புரம்'' என்பது இந்தக் கழநிவாசலையே குறிக்கும். (S. I. I, VIII, No. 183-P. 90 11. 7-8; P. S. I. No. 163, 450. 990 காண்க.) வயிரவன் கோவிலாரின் குலச்சொற்றொடர் இவ்வூர்ப் பெயராகவே அமைந்திருப்பது நோக்கத்தக்கது. பெருந் தெரு என்பது பல வீதிகளுடன் கூடிய ஊர்ப்பகுதி அல்லது ஊர் என்று தெரிய முடிகிறது. மேலே கல்வெட்டில் வரி 7–8 ல் ஐஞ்ஞூற்றுவப் பெருந்தெரு என வருவது காண்க.

2 கல்வாயில் நாடு என்பது இளையாத்தங்குடி நெய்வாசல் முதலான பல ஊர்களைத் தன்னகத்தே கொண்ட நாடு.

3 கீழ்க்குண்டாற்று நாடு என்பது மருதங்குடி சிறுவயல் முதலான ஊர்களைத் தன்னகத்தே கொண்ட நாடு.

4 கான நாடு என்பது புதுக்கோட்டைப் பகுதி வெள்ளாற்றுக்குத் தெற்கில் காளுடிகாத்தான் முதலான பல ஊர்களைக் கொண்ட நாடு. காளுடி என்றும், விருதராஜப் பயங்கர வளநாடு என்றும் இதனைக் கல்வெட்டுக்கள் குறிக்கும்.

5 காரிகுடி என்ற பேரூரில் ஐஞ்னூற்றுவர் (அதாவது நகரத்தார்) பெருந்தெருவில் உள்ள நகரத்தார்க்கு.

6 பிடிபாடு = தஸ்தாவேஜ் (Record). பிடிதரம் என்ற சொல் இன்று நடைமுறையில் உள்ளது.

7 "ஊரார் பக்கல் விலைகொண்டுடைய மருதங்குடி வயல்" என்று குறிப்பதால் ஊரார்க்கு உடைமையாய் இருந்தனவற்றை முன்னமேயே விலைக்கு வாங்கியிருந்ததும், இப்பொழுது நாட்டுக்கு உடைமையாய் இருந்த நாலுமா (1/5 ஐந்தில் ஒரு பங்கு) உரிமையை வாங்கிக்கொண்டதும் இந்த நிலங்கட்கு உழுவோரிடமிருந்து இறை குடிமை முதலான வரி வாரம் முதலியவற்றை நாட்டு விகிதப்படி வசூலித்துக்கொள்ள சம்பந்தப்பட்ட மூன்று நாட்டவரிடமிருந்தும் பிடிபாடு பெற்றுக்கொண்டிருப்பதும் இதிலிருந்து நன்கு புலனாகிறது.

8 வரிசை—வரிவிதிப்பு.

9 மாதவராயர், இருங்கோளர், நிலகங்கரையர் என்ற மூவர் மூன்று நாட்டிற்காகவும் கைநாட்டியிருக்கிறார்கள்.

10 தற்குறி பூரித்ததற்கு "தடகைய........ ...த்து மெய்யர்" கையொப்பமிட்டிருக்கிறார்.

11 இவற்றைச் சுவரில் பதிப்பித்தவன் வல்லன் பெரியான் என்பதும் தெரிவிக்கப்பெறுகிறது.

## கல்வெட்டு எண். 9

தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரைத்
திருவாயிலுக்கு வலபால் உட்சுவரில் உள்ளது:

வரி : 21] [காலம் : கி. பி. 1202

*[ஸ்வஸ்தி ஸ்ரீ திரி]புவநசக்ரவத்தி [1] கோநே*
*ரின்மை கொண்டான் [கானநாட்டு] காரிகுடி*
*ஐஞ்ஞூற்றுவன் பெருந்தெருவில்*
*நகரத்தார் தாங்கள் வில்லத்தொற்று*
*.....................பக்கல் விலைகொண்டுடையகீ*
*[ழ்க்கு]ண்டாற்று [2] மருதங்குடியும் இவ்வூ*
*ர் வயலும் உட்பட்ட பிடிபாட்டின்ப*
*டி உள்ள நிலத்துக்குப் புரவு குறைச்சு*
*நாட்டார் தங்களுக்கு தந்த பிடிபாட்[டி]*
*ன்படி புரவுநிலம் நாலு [மாப்புரவுக்கு] நாட்டு*
*விழுக்காட்டுப்படி பதினென்...........வது*
*முதல் கடமை கொள்வதா[கவும் இ]ரா*
*சநாராயணபுரமென்று நகர[மைத்துக்]கு*
*டி யேறுவதாகவுஞ் சொன்[னே]ம் இ*
*ப்படிக்கு சந்த்ராதிச்சவரை செல்விதா*
*கச் [3] செம்பிலுங் கல்லிலும் வெட்டி*
*க்கொண்டு அநுபவிக்க. இவை [4] கா*
*விங்கராமன் எழுத்து [5] பிரசாதஞ் செ(வ்)[ய்]த*
*திருமுகப்படி.................இவை காவிங்கராயன் எழு*
*த்து யாண்டு யிதுநாள் உாகூமச [6] இவைவி*
*ழுப்பாதராயன் னெழுத்து. உ*

1 கோனேரின்மை கொண்டான் என்பது பரகேசரி மூன்றும் குலோத்துங்க சோழ மன்னனின் பட்டப் பெயர்களுள் ஒன்று. இவன் ஆண்ட காலம் கி. பி. 1173-1223. பாண்டி நாட்டு அரசுரிமை முதலாம் குலசேகரனுக்கு (1190-1217) கிடைக்கும்படி பேருதவி புரிந்தவன். பாண்டிய மன்னன் தனக்குக் கப்பம் கட்டிவரினும் தான் மதுரையில் வீராபிஷேகம் செய்து கொள்ள இசையாமல் இருந்ததாலும், தன் மாற்ருருடன் அவன் உற வாடியதாலும், தனக்கு முரணுன செயல்களில் ஈடுபடுவதாக உணர்ந்த மையாலும் அவன்மீது படை எடுத்து வந்துவிட்டான். குலசேகர பாண்டியன் தனது புகழ் படைத்ததும் திறமை மிக்கதுமான ஏழகப் படை முதலிய படைகளுடன் பிரான்மலைக்கு அணித்தேயுள்ள மட்டியூர், கழிக் கோட்டை ஆகிய இடங்களில் மூன்றும் குலோத்துங்கனின் சேனையை எதிர்த்துப் பொருதினுன். கடும்போர் நிகழ்ந்தது. முடிவில் சோழர் படைக்கு முன் பாண்டிய வீரர்கள் நிற்க ஆற்ருமல் சிதறியோட வேண் டிய நிலை ஏற்பட்டது. குலசேகரன் வேறு வழியின்றி சுற்றத்தோடு வேறிடங்களில் பதுங்கி மறைந்தொழுக வேண்டியதாகப் போய்விட்டது. வென்ற சோழப்படை வெற்றி வெறியுடன் மதுரை நகரடைந்து அரண் மனை, முடிசூட்டு மண்டபம் முதலியவற்றை இடித்துக் கொட்டம்பரப்பிச் சினமடங்கியது. அதன் பின் மூன்றும் குலோத்துங்கன் கோனேரின்மை கொண்டான், வீரதேவன், சோழபாண்டியன் என்ற பட்டங்களுடன் மதுரை நகரில் வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் செய்துகொண்டு பாண்டி மண்டலத்தைத் தானே சில ஆண்டுகள் ஆண்டுவந்திருக்கிருன். சில ஆண்டுகட்குப் பின்னர் மனமாற்றம் அடைந்து குலசேகர பாண்டிய னுக்கே வழங்கிவிட்டான். இத்தகைய செயல்களினுல்தானே என்னவோ இவன் தியாக விநோதன், தியாக மாவிநோதன் என்றெல்லாம் பாராட்டப் பெற்றிருக்கிருன். தியாக விநோதன திருமடம் என்று 5. 7 ம் எண்ணுள்ள கல்வெட்டுக்களில் காணப்பெறுகின்றமையும் காண்க.

2 மருதங்குடி ஊரும் இங்குள்ள வயல்களும் உட்பட்ட பிடிபாடு என்று துலக்கமாகச் சொல்லுவதுடன் நாட்டு விகிதப்படி கடமை வசூல் செய்து கொள்வதற்கும் இராச நாராயணபுரம் என்ற பெயருடன் புது நகரம் அமைத்து அதில் நகரத்தார் குடியேறி வாழவும் மன்னன் அனுமதி அளித் திருக்கிற செய்தி நன்கு புலனுகிறது.

3 "செம்பிலும்" என்று காணப்பெறுவதால் செப்புப் பட்டயமும் இருந் திருக்கவேண்டும்.

4 திருமுகம் எழுதியவன் காலிங்கராமன்

5 அரசன் அருளிய திருமுகப்படி பிடிபாடு செய்து கொடுத்தவன் காலிங்கராயன்.

6 இந்தக் கல்வெட்டைப் பதிப்பித்தவன் விழுப்பாதராயன். உ. என்ற குறி முற்றுப்பெற்றதை உணர்த்துவதாகும்,

# கல்வெட்டு எண். 10

**தேசிவிநாயகப் பிள்ளையார்க்கு எதிரில்**
**திருவாயிலுக்கு இடபால் உள்ளது:**

**வரி: 13]** **[காலம்: கி. பி. 1114**

*ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபு[வ]ன சக்கரவத்திக*
*ள் ஸ்ரீ வல்லப தேவற்கு யாண்டு உம*
*ந வது கேரளசிங்கவளநாட்டு*
*கீழ்குண்டாற்று மருதங்குடி*
*[வல்லக் கூ]ற்றுவன் சோறன்*
*..................°பட்டவனே சாத்தி அதியரத்*
*தார்விட்ட [1] விளக்காடு திருவீங்கைக்குடி*
*மஹதேவற்கு திரு [2] நுந்தா விளக்குக்குவிட்*
*டு கல்வில் வெட்டுவிச்சே(ன்)[ம்] சோறன்சே*
*றெனும் அரியானும் இ[வ்]விருவோமும்*
*[3] இவை கைக்கொண்டான் இடையன் அவனி*
*சுந்தன். [4] சாவாமூவாபேராடு-ரும-பன்மாஹேச்*
*வரர*
*கைஷ*

---

o போரில் மடிந்தவனே முன்னிட்டு;

1 விளக்காடு = விளக்கெரிப்பதற்கு மூலதனமாக விட்ட ஆடு.

2 நுந்தா விளக்கு = தூண்டாமணி விளக்கு, 'நந்தா விளக்கு', 'நொந்தா விளக்கு' என்றும் குறிக்கப்பெறும். இது கருவறையில் பெருமானுக்குப் பக்கத்தில் என்றும் எரிந்துகொண்டிருப்பது.

3 இவற்றைப் பரிபாலிக்க இசைந்து பெற்றுக்கொண்டவன் அவனி சுந்தன் என்னும் இடைக்குலத்தான்.

4 சாவா மூவாப்பேராடு = சாவாத, கறவை மாறுத பெரிய ஆடுகள். அதாவது 50 ஆடுகள் என்றும் கூடுதல் குறைவின்றி காத்து ஒப்புவிக்கப்பெற வேண்டியவை.

## கல்வெட்டு எண். 11

தேசிவிநாயகப் பிள்ளையார் குடைவரை வாயிற்படிக்கு மேற்கே தாழ்வார அறைக்குத் தெற்கில் மேல்புறச் சுவரில் உள்ளது:

வரி: 1 ] [ காலம் : கி. பி. 642–668.

# ஈக்காட்டூர்

---

கல்வெட்டிலாகா ஆய்வாளர்களின் கருத்துப்படி இது 1200 ஆண்டுகட்கு முந்தியதாகும்.

## பிற எழுத்துக்கள்:

1 *குன்றுமலையில் உள்ள குகையில் தலைகீழாக எழுதப்பெற்றிருப்பது :*

**பஞ்சபாண்டவர் படுக்கை**

*(இது 600 ஆண்டுகட்கு முந்தியதாகும்)*

2 *ஊர்க் குடியிருப்பில் உள்ள ஊருணிக்குத் தண்ணீர் வருகிற கால்வாய்க் கரந்தண்டில் நட்டுள்ள எல்லைக் கல்லில் எழுதப்பெற்றிருப்பது :*

**காளியகாரன்**

*(சிவன்கோவில் நிலத்து எல்லையைக் குறிக்கும் இத்'திரிசூலக்கல்' 500 ஆண்டுகட்கு முந்திய தாகும்)*

3 *தேசி விநாயகப் பிள்ளையார் பீடக்கல்லில் 1936 வரைச் சாத்தப்பெற்று வந்ததும் பழுதுபட்டுத் தற்பொழுது காணமற் போய்விட்டதுமான பித்தளைத் தகட்டின் மீது எழுதப்பெற்றிருந்தது :—*

**பெருங்கருணை பெருமாள் தருமம்**

(இது 600 ஆண்டுகட்கு முந்தியதாகும்.)

பிற்சேர்க்கை: 2.

## பெயர்களும்—மூர்த்திகளும்.

**ஊர்ப் பெயர் :**

1. பிள்ளையார்பட்டி
2. மருதங்குடி
3. திருவீங்கைக்குடி
4. திருவீங்கைச்வரம்
5. ஈக்காட்டூர்
6. இராச நாராயணபுரம்
7. மருதங்கூர்
8. கணேசபுரம்
9. தென்மருதூர்
10. கணேசமாநகரம்
11. பிள்ளைநகர்

—o—

**பிள்ளையார் பெயர் :**

1. தேசிவிநாயகப் பிள்ளையார்
2. கற்பகப் பிள்ளையார்
3. கற்பகமூர்த்தி
4. கற்பக விநாயகர்
5. வரத கணபதி
6. கற்பகக் களிறு
7. கணேசன்
8. கணேச புரேசன்
9. மருதங்கூர்அரசு
10. மருதங்கூர்ஈசன்

குன்டவரையுள் இருந்தருளும் சிவபெருமான் திருப்பெயர்கள்):

1. திருவீங்கைக்குடி மகாதேவர்
2. திருவீங்கைக்குடி நாயனர்
3. மருதங்குடியான இராசநாரா யணபுரத்து உடையார்
4. திருவீங்கைச் சுரமுடைய நாயனர்
5. திருவீசர்

அம்மன் பெயர் :

சிவகாமி

கற்றளியில் இருந்தருளும் சிவபெருமான் திருப்பெயர்கள்:

1. திருமருதங்குடி நாயனர்
2. மருதங்குடி நாயனர்
3. மருதீசர்

அம்மன் பெயர் :

வாடாமலர் மங்கை

## பிள்ளையார்பட்டியில் உள்ள திருவுருவங்கள் :

* இப்புள்ளி இடப்பெற்றவை செப்புப் படிமங்கள்; மற்றையவை கற்படிமங்கள்.

1 *அங்குச தேவர்
2 *பிள்ளையார்
3 தேசிவிநாயகப் பிள்ளையார் (கற்பகமூர்த்தி)
4 திருவீங்கைக்குடி மகாதேவர் (திருவீசர்)
5 *பிரியாவுடையம்மன் (போக சக்தி)
6 சம்பந்தர்
7 அப்பர்

8 சுந்தரர்
9 மணிவாசகர்
10 அகோர மூர்த்தி
11 பிராமி
12 மாகேச்வரி
13 கௌமாரி
14 வைஷ்ணவி
15 வாராகி
16 மாகேந்திரி
17 சாமுண்டி
18 காட்சி விநாயகர்
19 *தனியம்மன்
20 *சோமாஸ்கந்தர்
21 பிராகார விநாயகர்
22 விசுவநாதர்
23 விசாலாட்சி
24 நாகர்
25 வள்ளி தெய்வானையுடன் ஆறுமுகப் பெருமான்
26 கணபதி, ஐந்து நாகர்களிடையில் பசுபதீசர்
27 தண்டாயுதபாணி
28 துர்க்கை - லட்சுமி - சரஸ்வதி
29 கார்த்தியாயினி
30 வைரவர்
31 நவக்கிரக மண்டலம்
32 *பள்ளியறை நாயனர்-*பள்ளியறை நாச்சியார்
33 சிவகாமி. (திருவீசர் அம்மன்)
34 சூரியன்
35 சந்திரன்
36 துவார சுப்பிரமணியர்
37 துவார பாலகர்கள்
38 துவார கணபதி
39 கோஷ்ட கணபதி

40 தட்சிணாமூர்த்தி
41 லிங்கோத்பவர்
42 பிரம்மா
43 சண்டேசர்
44 விஷ்ணு துர்க்கை
மருதமரம் (தல விருட்சம்)
45 *கொங்கு நாச்சியம்மன்
46 *அஸ்திர தேவர்
47 *சந்திரசேகரர் - அம்மனுடன்
48 *பிரதோஷ நாயகர் - அம்மனுடன்
49 *மருதங்குடி நாயனார் (மருதீசர்)
50 *பிரியாவுடையம்மன் (போகசக்தி)
51 *வள்ளி தெய்வானையுடன் சுப்பிரமணியர்
52 *சண்டேசர்
53 *சம்பந்தர்
54 *அப்பர்
55 *சுந்தரர்
56 *மணிவாசகர்
57 *நடராஜர்
58 *சிவகாமசுந்தரி
59 வாடாமலர் மங்கை (மருதீசர் அம்மன்)
60 ஊருணிவிநாயகர்
61 கோரக்க விநாயகர்

## நித்திய வழிபாட்டு நேரம் :

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | திருவனந்தல் | முற்பகல் | 6—6-30 | மணி |
| 2 | காலசந்தி | ,, | 8-30—9-30 | ,, |
| 3 | உச்சிக்காலம் | ,, | 11—12 | ,, |
| 4 | சாயரட்சை | பிற்பகல் | 5—6-30 | ,, |
| 5 | அர்த்தஜாமம் | இரவு | 8—9 | ,, |

பிற்சேர்க்கை-3

## கும்பாபிஷேகத் தேதி விபரம்

1 விளம்பி௵ தைமீ ௧௦௨ (22—1—1899) ஞாயிற்றுக்கிழமை புதுக்கோவில் கட்டி மூர்த்திகளை அங்கெழுந்தருளச் செய்து அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம்.

2 பிரபவ௵ தைமீ உ௮௨ (10—2—1928) வெள்ளிக்கிழமை மறு அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம்.

3 ஸ்ரீமுக௵ வைகாசிமீ ௩௦௨ (12—6—1933) திங்கட்கிழமை மருதங்குடி நாயனர் திருச்சந்நிதி ராஜகோபுரம் அலங்கார மண்டபம் கட்டி முடித்து ராஜகோபுரக் கும்பாபிஷேகம்.

4 விகிர்தி௵ தைமீ உ௮௨ (10—2—1951) சனிக்கிழமை மூன்ருவது அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம்.

## இக்கோவில் பெற்ற பாடல்கள் :

1 மதுரைத் தமிழ்ச்சங்க வித்வான் மு. கோவிந்தசாமி ஐயரவர்களின் **" ஸ்ரீ கற்பகவிநாயகர் பதிகம் "**

2 காரைக்குடி சைவ சித்தாந்தச் செல்வர் ராம. சொ. சொக்கலிங்க ஐயா அவர்களின் **" கற்பகவிநாயகர் பதிற்றுப்பத் தந்தாதி "**

3 ஷை யார்களின் **வாடாமலர் மங்கை பதிகம்**

4 ஷை யார்களின் **மருதீசர் பதிகம்**

5 அறுபதாண்டுகட்கு முன் பிள்ளையார்பட்டி மணியமாக இருந்த நாராயணசாமி ஐயரவர்கள் குமாரர் கிருஷ்ணய்யர் அவர்களின் **ஸ்ரீ கற்பகவிநாயகர் பதிகம்**

6 காரைக்குடி சா. கணேசனின் **தேசிவிநாயகப்பிள்ளையார் ஒருபா ஒருபது.**

7 வேறு பல தனிப் பாடல்கள்

பிற்சேர்க்கை: 4.

# இசைகுடிமானம்

(திருமணக் காலத்தில் இரு வீட்டாரும் சேர்ந்து எழுதிக்கொள்ளும் ஒரு உடன்பாடு)

.........................ஷ....................மீ ............உ

கல்வாயில் நாட்டில் இளையாத்தங்குடி யான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடி யான இராசநாராயணபுரத்தில் பிள்ளையார்பட்டி யான திருவேட்பூருடையார் முருகப்ப செட்டி வீரப்பரோ, கேரளசிங்கவளநாடாகிய ஏழகப் பெருந்தெருவான வீரபாண்டியபுரத்தில் சிறுகுளத்தூருடையார் தெய்வநாயகர் வகுப்பு அருணசலம் செட்டி ராம நாதரோ இவர் மகன் முருகப்பனுக்கு இவர் மகள் நாச்சியம்மையைப் பாணிக்கிரகணம் பண்ணிக் கொண்டமைக்கு இவர் பூஷணம் பூட்டும் பொன் [1]ஒன்பது ஆறு கல்லெடைப் பொன் பதின்முக் [2]கழஞ்சு; இவர் சீதனம் கொடுக்கும் பொன் [3]இம் மாறு இவ்வெடைப்பொன் ஆறு கழஞ்சு; வெள்ளி ஆறு கழஞ்சு; வெண்கலம் [4]தராப்பலம் ஆறுபத் தொன்று; [5]வெள்ளாட்டிக்குப் பணம் முப்பது;

---

1 ஒன்பது மாற்றுள்ள ஆறு கல்லெடை கொண்ட பொன் (ஒரு நாணயம்) பொன் = 10 பணம்.

2 கழஞ்சு என்பது $\frac{1}{6}$ அவுன்ஸ் அல்லது $\frac{5}{12}$ தோலா அல்லது ஒன்றே காலே வீசம் கால் வீசம் வராகனெடை கொண்டதாகும்.

3 இம்மாறு = இவ்வொப்பான, இவ்விதம்.

4 தரா என்பது எட்டுப்பங்கு செம்பும் ஐந்து பங்கு ஈயமும் கொண்ட கலப்பு லோகம்,

5 வேலைக்காரி,

சீராட்டுச் சக்கரம் ஆறுபத்தொன்று இவ்வகைப் படி செய்வோம். இவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது; மோதிரம் வராகனெடை மூன்று; இவர் உகந்து உடைமையாய்க் கொடுக்கும் பொன் வளையல் ஏழு கழஞ்சு; இவ்வகைப்படி செய்வோம். இந்நாள் இவர் இடும் பொன் இவர் சொற்படி தெரிசனை பதின்முக்கழஞ்சு. இவ்வகைப்படி செய் வோம். இந்த இசைகுடிமானம் எழுதினேன். கல்வாயில் நாட்டில் இளையாத்தங்குடியான குல சேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராச நாராயணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட் பூருடையார் ராமநாதன் செட்டி சிதம்பரம்.

மாப்பிள்ளை வீட்டார் கையொப்பம்........................

பெண் வீட்டார் கையொப்பம்............................

## ஊடல் நீங்கியமைக்கு உவந்தளித்த உரிமை

(மார்கழித் திருவாதிரை யன்று படிக்கப் பெறுவது)

ஸ்ரீமது அகிலாண்டகோடி பிர்ம்மாண்ட நாயக னுய், ஆதி-மத்திய-அந்த ரஹிதனுய், ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் என்று சொல்லப் பெற்ற பஞ்ச கிருத்திய காரகனுய் விளங்கா நின்ற கைலாசபதியாகிய யாம்,

பூமியின் கண்ணே எமது ச்ருஷ்டிக்குட்பட்ட சமஸ்த ஜீவகோடிகளின் ரக்ஷணர்த்தமாயும், பக் தானுக்கிரஹத்தின் பொருட்டும் எழுந்தருளியிருக் கிற திவ்ய க்ஷேத்ரங்களில் விசேஷமான, கன்னி நாடென்ற பாண்டி மண்டலத்தில் நமது ஜேஷ்ட குமாரனுன கணபதி, கற்பக விருட்சம் சூழ்ந்த திரு மலையில் ஸ்வயம்புவாய்த் திருக்கோலம் கொண்

டெழுந்தருளியிருப்பதை முன்னிட்டு யாம், கேசவன், நான்முகன் முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களுடனும், நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிபுங்கவர்களுடனும், கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்யாதரர் முதலாகிய ஆகாசவாசிகளுடனும் எழுந்தருளி தீர்த்தம், ஸ்தலம் முதலான மகத்வங்களை கண்டு மகிழ்ந்து இந்தப் பவித்ரமான க்ஷேத்ரத்தைப் பிரிய மனமின்றி மருதங்குடியான ராஜ நாராயணபுரம் என்றும், கணேசபுரம் என்றும் சொல்லப் பெறும் இப்பிள்ளையார் பட்டியிலே சிவகாமியம்பாள் சமேத திருவீங்கைச்வரனென்றும், அசோக குஸுமாம்பாள் சமேத அர்ஜுன வனேச்வரனென்றும், சிவகாம சுந்தரி சமேத ஸ்ரீ ஸபாநாயகனென்றும் திருநாமங்கள் கொண்டு வீற்றிருந்தருளுகின்றோம். இப்பொழுது நமது அடியார்கட்கு அருள் புரியக் கருதி நாம் தனித்து எழுந்தருளிய காரணத்தால் நமது உமாதேவியார்க்கு மன வருத்தம் உண்டாகி நம்பால் ஊடி, திருக்கோவில் திருவாயில் கபாட பந்தனமிட்டிருந்தபடியால் நமது பக்த சிரோமணியான சண்டிகேச்வரன், மணிவாசன், சுந்தரன் இவர்களை முன்னிட்டு ஊடல் நீங்கியமைக்கு அகமகிழ்ந்து தமது பிதுரார்ஜிதமாயினும் நமது ஆளுகையில் இருக்கின்ற அடியிற் கண்ட க்ஷேத்திரங்களைத் தமக்கு சுவாமியமாய் விட்டிருப்பதற்கு விபரமாவது:—

நமது அருள் நிறைந்து விளங்காநின்ற பரத கண்டத்தில் ஐம்பத்தாறு தேசங்களில் உத்கிருஷ்டமான குணகடலுக்கு மேற்கு; குமரிமால் வரைக்கு வடக்கு; குடதிசைப் பெருவெளிக்குக் கிழக்கு; வெள்ளாற்றுக்குத் தெற்கு; இதற்குட்பட்ட பாண்டி மண்டலம் என்னும் கன்னி வளநாட்டில் நீர் வளம், நில வளம், குடி வளம், பயிர்வளம் நிரம்பியதும்

மாத மும்மாரி பொழிவதுமான பட்டமுடையான் ஊருணிக் கீழ்கரைக் கல்லுக்கும், உலகடி ஊருணி வடகரைக் கல்லுக்கும் மேற்கு; மருதங்குடிக் கண் வாய் தென்கடை ஒற்றைப் பனைத் திரிசூலக் கல் லுக்கும், வணிகனுண்டான் ஏந்தல் உள்வாய்க் கல்லுக்கும் வடக்கு; ஈங்கைக்குடிக் கண்வாய் உள் வாய் நாவல் மரத்துக் கல்லுக்கும், பறத்திடவல் புன்செய் வடவேலிக் கல்லுக்கும், பார்ப்பான் புளிப் புன்செய் மேல்வேலிக் கல்லுக்கும்,வயிரவன் பட்டிப் புதுக்கண்வாய் உள்வாய்ச் சுடலைக் கல்லுக்கும் கிழக்கு; காடமுத்தான் கண்வாய்த் தென்கடைப் புளியடிக்கல்லுக்கும், நீலமுத்தான் தென்கடை விரையடிக் கல்லுக்கும் தெற்கு; இப் பெருநான் கெல்லைக் குள்ளடங்கிய பிள்ளையார்பட்டிக் கிராமம் ஒன்றுக்கு விரையடி (ளகூ௰அ) கலனே ஏழு மரக் கால் ஐந்து படிக்கு நிலம் (எ௰கூ) மா காணியே அரைககாணிமுந்திரி; புன்செய் குறுக்கம் கூளஙஇ. இவ்வளவு பூமியின் சகல சுவாதந்தர்யத்தையும் தமக்கு விட்டுக்கொடுத்தோம். இதில் உள்ள நிதி, நிட்சேப, ஜல, தரு, பாஷாண, ஆட்சிணி, ஆகாம்ய, வர்த்தமானம் என்று சொல்லப்பெற்ற அஷ்ட போக தேச சுவாம்யங்களுடன் ஆசந்திரார்க்க ஸ்தாயியாய் ஆண்டு வரும்படி கட்டளையிட்டோம். இந்தப் பிரகாரம் ஆண்டார் அருளியபடி சண்டிகேச்வரன்.

பிற்சேர்க்கை-5

# பிள்ளையார் தோத்திரப் பாடல்கள்

## திருமூலர் அருளியது

*ஐந்து கரத்தனை, ஆனை முகத்தனை,*
*[1] இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை,*
*[2] நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினைப்*
*[3] புந்தியில் வைத்துஅடி போற்றுகின் றேனே.*

1 சந்திரனின் இளம்பிறை போன்று சிறிது வளைந்ததும் ஒளியுடையதுமான வெள்ளைத் தந்தம் உள்ளவனை; 2 சிவன் மகனை; 3 அறிவில் உணர்வில்; அதாவது, மறவாத நினைப்பில்.

## கபிலதேவர் அருளியவை

*[1] திருஆக்கும்; செய்கருமம் கைகூட்டும்; [2] செஞ்சொல்*
*பெருவாக்கும், பீடும் பெருக்கும்;- [3] உருஆக்கும்;*
*ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்*
*காதலால் கூப்புவர்தம் கை.*

1 செல்வத்தை உண்டாக்கும். 2 நல்ல மொழிநிறைந்த மேலான வாக்கு வன்மையையும்; புகழையும் வளரச்செய்யும். 3 சிதைந்த வற்றையும் சீர்செய்யும்.

*விநாயகனே[1] வெவ்வினையை வேரறுக்க வல்லான்;*
*விநாயகனே[2] வேட்கைதணி விப்பான்;-விநாயகனே*
*விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனும் ஆம்*
*[3] கண்ணிப் பணிமின் கனிந்து [ தன்மையினல்*

1 பிறப்பு-இறப்பு என்னும் பெருந்துன்பத்திற்கு ஏதுவாகிய செயலை அடியோடு தொலைக்க வல்லவன்;
2 எல்லா விருப்பங்களையும் ஆற்றுபவன்; 3 கருதி ; பொருந்தி.

## அதிராவடிகள் அருளியது

மொழியின் மறைமுதலே,[1]முன்நயனத்து ஏறே,
[2]கழிய வருபொருளே, கண்ணே,—[3]தெழிய,
[4]கலாலயனே, எங்கள் கணபதியே, நின்னை
அலாது, ஐயனே, சூழாதுஎன் அன்பு.

1 நெற்றிக்கண்ணுடைய ஆண்யானையே; 2 பெருகி; 3. ஒலிஉரு ஆனவனே; 4. கலைகளெல்லாம் தன்னுள் அடங்க நிற்பவனே;

## நம்பி ஆண்டார் நம்பி அருளியது

என்னை[1] நினைந்தடிமை கொண்டு என் இடர்
[2]தன்னை நினையத் தருகின்றான்-புன்னை [கெடுத்துத்
[3]விரசுமகிழ் சோலை[4]வியன் நாரையூர் [5]முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்.

1 விரும்பி அடிமையாக ஏற்றுக்கொண்டு ; 2 அவனை நான்மறவா திருக்க அருளுகின்றான் 3 செறிந்த இன்பச் சோலை 4 சிறந்த நாரையூரில் உள்ள 5 முக்கண் முதல்வனான சிவன்.

## பெருந்தேவனார் அருளியது

[1]ஓத வினை அகலும்; ஓங்கு புகழ்பெருகும்
[2]காதற் பொருள் அனைத்தும் கைகூடும்—[3]சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேல் பாரதப்போர் தீட்டும்
[4]தனிக்கோட்டு வாரணத்தின் தாள்.

1 பக்தியுடன் பேச ; 2. விரும்பிய செல்வம் எல்லாம் ; 3 குளிர்ந்த பனிக்கட்டிகள் தோய்ந்த சிகரத்துடன் கூடிய பெரிய மலையாகிய மேருவின் மேல் 4. ஒற்றைக் கொம்புடைய யானைமுகன் திருவடி.

## அவ்வையார் அருளியவை

வாக்குஉண்டாம்;நல்ல மனம்உண்டாம்;[1] மாமலராள்
நோக்குஉண்டாம் [2] மேனி நுடங்காது-பூக்கொண்டு
[3] துப்புஆர் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு

1 சிறந்த மலரான தாமரையில் இருப்பவ ளான சீதேவியின்; 2 உடல் தளராது; 3 பவளம்போன்ற செந்நிறம் பொருந்திய.

பாலும், தெளிதேனும், பாகும், பருப்பும்இவை
நாலும்கலந்துஉனக்குநான் தருவேன்-கோலம்செய்
[1] துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
[2] சங்கத் தமிழ்மூன்றும் தா.

1 தூய யானைமுகத்துடன் கூடிய;
2 இயல், இசை, கூத்து என்னும் சங்கத் தமிழ் மூன்றையும்.

## உமாபதிசிவம் அருளியது

வானுலகும் மண்ணுலகும் வாழ,மறை வாழப்,
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசைவி ளங்க,
ஞானமத, ஐந்துகர, மூன்றுவிழி,[1] நால்வாய்
ஆனைமுக னைப்பரவி [2] அஞ்சலிசெய் கிற்பாம்

1 தொங்கும் வாய்; 2 கைகுவித்து வணங்குவோம்.

## வில்லிப்புத்தூரார் அருளியது

[1] நீடாழி உலகத்து [2] மறை,நாலோடு
ஐந்து என்று நிலைநிற்கவே
[3] வாடாத தவவாய்மை முனிராஜன்
மாபார தம்சொன்னநாள்
[4] ஏடாக வடமேரு வெற்பு, [5] ஆக-
வம்கூர் எழுத்தாணிதன்
கோடாக [6] எழுதும் பிரானைப்
பணிந்து அன்பு கூர்வாம் அரோ.

1 நீண்ட கடலால் சூழப்பட்ட உலகத்து; 2 நான்கு வேதங்களுடன் மகாபாரதமும் சேர்ந்து ஐந்து வேதங்கள் என்று சொல்லும்படி 3 அழியாத தவவலியுடைய வியாசமுனி; 4 வடக்கில் உள்ள மகா மேரு எழுதற் குரிய ஏடு ஆக; 5 போரில் கூரிய படையாகும் தனது தந்தமே எழுத்தாணி ஆக; 6 அந்த மகாபாரதக் கதையை எழுதிய விநாயகப் பெருமானைப் பணிந்து பக்தி கொள்ளுவோம்.

## கோவிலூர் ஆண்டவர் அருளியது

[1] முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழுதுஅகற்றும் முகத்தி னானை,
அற்பசுகத்து எனைஅழுத்தா ஐங்கரனைப்,
[2] பிற்பவமும் அகற்றும் கோவைச்,
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம் பணியும் [3] துணைத்தா ளானை,
[4] கற்பகத்தின் மிடிஅகற்றும் கற்பகம்ஆம்
விநாயகனைக் கருத்துள் வைப்பாம்.

1 முன்பிறப்பில்; 2. பின்வரு பிறவியையும் போக்கும் இறைவனை; 3. இரட்டைத் திருவடியுடையவனை; 4. சகல செல்வத்தையும் உடைய கற்பக விருட்சத்தின் வறுமையையும் போக்கும் பெருஞ் செல்வனாகிய விநாயகனை.

### இராமலிங்க சுவாமிகள் அருளியது :-

[1]பெரும்பொருட்கு இடன் ஆம் பிரணவ வடிவில்
பிறங்கிய ஒருதனிப் பேறே,
[2]அரும்பொருள் ஆகி மறைமுடிக் கண்ணே
அமர்ந்தபேர் ஆனந்த நிறைவே,
[3]தரும்பர போக சித்தியும், சுத்த
தருமமும், முத்தியும் சார்ந்து
விரும்பினோர்க்கு அளிக்கும் வள்ளலே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே.

---

1 வஸ்து தத்துவங்கட்கெல்லாம் அடிப்படை இடமாக உள்ள ஓங்கார உருவில் விளங்கிடும் ஒப்பற்ற பெரும் பாக்கியமே ;

2 அரிய வஸ்துவும் ஆகி வேத சிகரத்திலே வீற்றிருக்கும் பேரின்பப் பெருநிறைவே ;

3 கொடுக்கும் மேலான இன்பங் கைகூடுதலையும் தூய அறத்தையும், வீட்டையும், உன்னடி சார்ந்து வேண்டினவர்கட்கு அளிக்கும் தாதாவே, சித்தி விநாயகனே, விக்கினேச்சுரனே.

### மகாகவி பாரதி அருளியவை

எனக்கு வேண்டும் வரங்களை
[1] இசைப்பேன் கேளாய் கணபதி !
மனத்தில் [2] சலனம் இல்லாமல்,
மதியில் இருளே தோன்றாமல்,
நினைக்கும் பொழுது [3] நின் மவுன
நிலைவந்-திடநீ செயல்வேண்டும்;
[4] கனக்கும் செல்வம், நூறுவயது,
இவையும் தரநீ கடவாயே.

---

1 இனிமையாகப் பொருந்தச் சொல்வேன்; 2 தடுமாற்றம்; 3 ஞானத்தின் வித்தாகிய சுத்தமவுன நிலை; 4 கனமான - நிறைந்த செல்வம்.

[1]சுடரே போற்றி; [2]கணத்தேவர்
துரையே போற்றி; எனக்கு என்றும்
இடரே இன்றிக் காத்திடுவாய்
எண்ணு யிரம்கால் முறையிட்டேன்;
[3]படர்வான் வெளியில் பலகோடி
கோடி கோடிப் பல்கோடி
இடறு து ஓடும் அண்டங்கள்
இசைத்தாய் வாழி இறையவனே.

---

1 ஞான ஒளியே; 2. கணநாதனுகிய மேலவனே; 3. பரந்து விரிந்த வான வெளியில் எண்ணிலடங்காத கோடானுகோடி அண்டங்கள் ஒன்ருேடு ஒன்று மூட்டி மோதாமல் இயங்கிக் கொண்டிருக்கப் பொருத்திய கடவுளே நீ வாழ்க.

மேன்மைப் படுவாய் மனமே, கேள்;
விண்ணின் இடிமுன் விழுந்தாலும்
பான்மை தவறி நடுங்காதே!
பயத்தால் ஏதும் பயன் இல்லை;
யான்முன் உரைத்தேன் கோடிமுறை;
இன்னும் கோடி முறைசொல்வேன்.
[2]ஆன்மா ஆன கணபதியின்
அருள்உண்டு அச்சம் இல்லையே.

---

1 ஆகாயத்திலிருந்து இடி வந்து கண் எதிரில் விழுந்தாலும் கூறு கெட்டுப்போய் விலவிலத்து அஞ்சி நடுங்காதே; 2 எப்பொருட்கும் உட்பொருளாய்—உயிர்க்கும் உயிராய் விளங்கும் கணபதியின்

நமக்குத் தொழில்கவிதை, நாட்டிற்கு உழைத்தல்,
இமைப்பொழுதும் சோராது இருத்தல்;-
உமைக்கு இனிய
மைந்தன் கணநாதன் நம்குடியை வாழ்விப்பான்
சிந்தையே இம்மூன்றும் செய்.

## சொக்கலிங்க ஐயா அருளியவை

திருவும், குலமும், [1]எழில்நலனும்
திகழ்நற் குணனும் சிறப்பு எவையும்
[2]மருவு மகளிர் மன்றலும்,நன்
மக்கட் பேறும், வளர்கல்விப்
பொருளும், [3]தெருளும், [4]மெய்ஞ்ஞானப்
பொலிவும் மருதங் கூர்வாழ
வருகற் பகப்பேர் அண்ணல்கழல்
வணங்க [5]நியமம் வழங்கிடுமே.

1 உடல் அழகும்; 2 தழுவும் மாதர் திருமணமும், 3 அறிவுத் தெளிவும் 4 உண்மையறிவு விளக்கமும் ; 5 நிச்சயம்.

[1]செய்ய மேனி வெண்நீறு
செறியப் பரந்த திருவுருவம்
[2]ஐய, நோக்கின் ஆண்பெண் ஆம்
அகிலம் அனைத்தும் நீஎன்னும்
மெய்யும், [3]அத்து விதநிலையும்
மேவும் சக்தி சிவப்பொலிவும்,
[4]குய்யம் வெளிஆம் கற்பகப்பேர்க்
குன்றே மருதங் கூர்வாழ்வே.

1 சிவந்த மேனியில் வெள்ளையான திருநீறு நிறைந்து பரந்து விளங்கும் உன் அழகிய தோற்றத்தை ; 2. மேலானவனே, கருத்துச் செலுத்திக் காணபோமானால், ஆண் பெண் என்ற இருபாலாக விளங்கும் உலகம் எல்லாம் நீயே என்னும் மெய்ம்மையும், 3. இரண்டற்ற தன்மையும், 4. ரகசியம் வெளிப்பட்டுவிடும்.

செய்வனநின் தொண்டினிலும்,
சிந்தனைநல் தியானத்தும்,
கைவருசொல் எல்லாம்உன்
[1]கழல்பரசும் பாவினும்,[2]வான்

1 திருவடியைத் துதிக்கும் பாட்டினிலும்; 2 வானம் பொழிகின்ற வளம்சேர்ந்த

பெய்வளங்கூர் மருதங்கூர்ப்
பெருமானே எமதுகுலத்
[3]தெய்வதகற் பகமூர்த்தி
சென்றுயுமாறு அருளுதியே.

3 கற்பகமூர்த்தி எனப் பெயர்கொண்ட தெய்வமே;

[1]அரசு இருக்கை வேண்டிலன்பின்
[2]அயன் அரிஆ தியர்பதமும்
பெரிதுஎனக்கு இங்கு அருளுகஎனப்
பேசுகிலேன்; மருதங்கூர்
[3]மருவுஅருட்கற் பகமூர்த்தி,
வல்வினையேன் [4]நின்னடிக்கீழ்ப்
பெருகுஇயற்கை மெய்அன்பே
பேணும்நிலை அருள்வாயே.

1 அரச பதவி; 2 பிர்ம, விஷ்ணு ஆகும் பாக்கியமும்; 3 அருள் தழு விய 4 நினது திருவடியின்கீழ் மிகுந்துவரும் இயல்பான உண்மை அன்பைப் போற்றும் தன்மை

[1]கோவே, எம்[2]கோமானே, மருதங் கூர்எம்
குலதெய்வக் கற்பகமே, [3]கோது நீக்கும்
தேவே என்று உயர்குலநல் வணிகர் அன்பால்
சென்று இறைஞ்ச மணப்பேறு, செல்வப் [பேறு,
நாவார்கல் விப்பேறு, மக்கட் பேறு,
[4]நயப்பேறு, முதல் எவையும் நல்கி எந்தாய்.
[5]ஆவாநல் அருட்பேறும் அளிக்கின் றுய்என்று
அகிலமெலாம் எடுத்து உரைப்பது
அறியார் யாரே?

1 தலைவனே; 2 முத்தவனே; 3 குற்றம், 4 நற்பயன, லாபம், மகிழ்ச்சி; இனிமை, 5 அதிசயமான, ஆனந்தமான;

[1] தனயன் வேண்டினும், சம்பத்து வேண்டினும்,
[2] மனையை வேண்டினும், [3] வான்பயன் வேண்டினும்
[4] கனவளம் கொள் கணேசபுரேசனை
இனிய கற்பக மூர்த்தியை ஏத்துமே.

1 மகன்; 2. மனைவி; 3. மேலான பேறுகள்; 4. நிறைந்த வளமுள்ள, கணேசபுரம் என்னும் பிள்ளையார்பட்டி இறைவனை ;

[1] கண் ஆர் நுதலனைக் காது ஆர்
குழையனைக் [2] காற்சிலம்பாம்
பண் ஆர் மறையனைப் [3] பா ஆர்
துதியனை [4] பார்ப்பதிதன்
எண் ஆர் முதற்சுத கற்பக
தாருவைஎன் றும்குன்றாத்
[5] தண் ஆர் வயல்மரு தங்கூர்
இறைவனைச் சார்மின்களே.

1 கண் விளங்கு நெற்றியனை ; 2. இசை அமைந்த வேதமே கால் சிலம்புகளாக அமையப்பெற்றவனை ; 3. பாக்களால் அமைக்கப் பெற்ற தோத்திரங்களை உடையவனை ; 4. பார்வதியின் மதிப்புக் குரிய முதல் மைந்தனை கற்பகத்தை, 5. குளிர்மை பொருந்திய.

[1] மூலப்பொருள் என்றேமறை
முழுதும்புகல் மணியே,
ஞாலத்தவர் வானத்தவர்
[2] நயக்கும் [3] மரு தங்கூர்ப்
பாலத் [4] தனி விழியாய் அருள்
பழுத்து ஓங்கு கற்பகமே.
சீலத்தவர் பணிநாயக
தருவாய் [5] அருட் திருவே.

1 அனைத்திற்கும் முதல்; 2 விரும்பிப் போற்றும்; 3 மருதங்கூரில் வீற்றிருந்து பரிபாலிப்பவனே; 4 ஒப்பற்ற நெற்றிக் கண்ணை உடையவனே; 5 அருளாகிய செல்வத்தையே.

**கோவிந்தசாமி ஐயர் அவர்கள்**

[1]பண் இனிய தமிழ்வேதம் ஆனதே வாரம்அது
பண்பாக ஓதி அறியேன் ;
பரமன்அடி பேணும்அறு பத்துமூன்று அடியார்
பக்திமுறை கேட்டும் அறியேன் ; [கள்
எண்ணிமிக ஆசையொடு [2]மடல்காதல் ஆதிநூல்
இரவுபகல் ஓதல் ஆனேன் ;
ஏழைஅடி யேன்இவைகள் அறவே ஒழித்துநின்
[3]இணைமலர்த் தாளை ஏத்திக்,
கண்அருவி ஓடவும், நெஞ்சுஉருகி ஆடவும்
கடையனேற்குஅருள் செய்குவாய்
[4]கயமுகா சுரனைவென்று அமர்குலம் வாழ்வித்த
கற்பகப் பிள்ளை யாரே !
[5]வண்ணம்உறு கொன்றைமணி மாலைஅணி
மைந்தனே ! கருணை முகிலே! [ சங்கரன்
[6]வனசமலர் நிறைவாவி வளமருத புரிவாழும்
வரதகண பதி நாதனே !

---

1. இசை இனிமையுடன் கூடிய ; 2. மடல், காதல் முதலான சிற்றின்ப நூல்களை ; 3. இரண்டு தாமரை மலர்போன்ற திருவடிகளை 4, கஜமுகாசுரன் என்ற தானவனைக் கொன்று தேவர்களை எல்லாம் வாழ்வித்த 5. அழகு பொருந்திய 6. தாமரை மலர் நிறைந்திருக்கும் ஊருணி ;

எல்லாமும் நினதுசெயல், எப்பொருளும் நினது
எண்ணமே கொள்ள வேண்டும்; [என்ற

இரவுபகல் எப்பொழுதும் [1]அம்புயம்எனத்தகும்நின்
இணை அடியின் நினைவு வேண்டும்;

நல்லார் உரைத்தசொல் கேட்டிடுதல் வேண்டும்;
நட்புமற வாமை வேண்டும்; [அவர்

[2]நடலைவஞ் சனைஉளோர் இடத்தில்உற வாயினும்
நாடா திருத்தல் வேண்டும்;

செல்லான நாள்ஒழித்து இனியேனும் நின்புகழ்
செப்பும்நற் புத்தி வேண்டும்;

செந்தமிழ்ப் புலமைவர வேண்டும்; நின் பேர்அருட்
செல்வமும் வேண்டும். அரசே!

கல்லாலில் உற்றபரன் [3]நிகலத்து விளையாடு
கணேசனே! பிள்ளை நகரில்

[4]கற்பாழி தனில்மேவு கற்பக விநாயகா!
கற்பனை கடந்த பொருளே!

---

1. தாமரை; 2. பொய்ம்மை; 3. கல்லால் என்னும் இத்திமர நீழலில் அமர்ந்த பரமசிவனது தோள் மீது; 4. மலைக்குகை;

பிற்சேர்க்கை : 6

## தேசிவிநாயகப் பிள்ளையார் ஒருபா ஒருபது

( சா. கணேசன் )

நன்று புரிராச நாரா யணபுரமாம்
குன்றூர் மருதங் குடியதனில்—நின்றுஅருளும்
[1]வேதமுதல் தேசி விநாயகப் பிள்ளையார்
தீதுஅகற்றிக் காப்பார் தினம்.

1 வேதத்தின் முதலாம் பிரணவப் பொருளாகிய.

செய்யமரு தங்குடிவாழ் தேசிவி நாயகனும்
உய்யநமைக் காத்துஅருளும் ஓங்கார—ஐயனையே
[1]அல்லும், பகலும், அனவரத மும்துதிப்போம்
நல்லவழி காட்ட நமக்கு.

1 இரவும், பகலும் எப்பொழுதும்

ஆனை முகமும், [1]அரைப்பதும ஆசனமும்,
பானை வயிறும் படைத்துஒளிரும்—ஞானத்து
நல்உருவாம் தேசிவி நாயகன் தாள்பணிந்தே
எல்லவரும் வாழ்வோம் இனிது.

1 ஒரு காலைத் தொடையின்மேல் போட்டுக்கொண்டிருக்கும் முறை.

[1]ஒற்றை மருப்பு உடையான்; [2]ஓங்காரப் பேர்உருவான்
[3]முற்ற மதிசூடி ; முக்கண்ணன் ;—[4]சுற்றும்
அரவு உடையான்; [5]ஐயாறன் ; ஆனைமுகன் தாளே
[6]பரவிடுவோம் நித்தம் பணிந்து.

1 ஒரு தந்தத்தை உடையவன் ; 2. ஓ என்ற வரிவடிவத்தைப் போன்ற பெரிய உருவினை உடையவன் ; 3. இளம் பிறையை அணிந்தவன் ; 4. ஆபரணமாகப் பாம்பினைச் சுற்றிக்கொண்டிருப்பவன் ; 5. அழகிய ஆற்றை முடியிலே தரித்துக்கொண்டிருப்பவன் ; 6, தொழுதிடுவோம்.

கண்டால் [1]கலிதீரும் ; கைகுவித்தே மெய்வணங்கில்
மண்டும் வினைமுழுதும்[2] மாய்ந்தொழியும்—[3]அண்டம்
கருதும் முழுமுதலாம் கற்பகத்தை [4]வெற்பார்
மருதங் குடிநகர்க்கே வந்து

1 துயரங்கள் அகலும் ; 2. அற்றுப்போகும் ; 3. உலகமெலாம் மதிக்கும் பரம்பொருளான ; 4. மலைகள் உள்ள

அம்மைநீ ; அப்பன்நீ ; அன்புநிறை சுற்றம்நீ ;
செம்மைசால் நட்பில் சிறந்தோன்நீ ;—[1]இம்மைஅருள்
செல்வமொடு கல்வியும்நீ; தேசி விநாயகனே!
எல்லாமும் நீயே எமக்கு.

1 இவ்வுலக வாழ்வை வளப்படுத்துவதான ;

புத்திபெற வேண்டும்எனில், [1]புத்திரோற் பத்திமுதல்
சத்திபெற வேண்டும்எனில், [2]சாகாத—முத்திவரைச்
சித்திபெற வேண்டும்எனில் தேசி விநாயகனைப்
பத்திசெய வேண்டும் பணிந்து

1 மக்கட்பேறு முதலாகிய; 2. இறவாத மோட்சம் வரையில்;

[1]காலனையும் வெல்வோம்; [2]கடுநரகுக்கு ஆட்படோம்.
[3]மேலை வினைஇரண்டும் வேர்அறுப்போம்–[4]ஞாலம்இதில்
தெள்ளுமரு தங்குடித் தேசி விநாயகப்
பிள்ளையார் தன்னருளைப் பெற்று.

1 எமனையும் வெற்றிகொள்வோம்; 2 பெருந்துன்பம்சேர் நரகத்திற்கு ஆளாக மாட்டோம்; 3 பாப, புண்ணியம் என்னும் இரண்டு பழம் வினைகளையும் அடியோடு ஒழிப்போம், 4 பூவுலகில் தெளிவாக விளங்குகின்ற;

[1]காய,மன, வாக்குஅவையால், [2]கண்ஆதி ஐம்பொறியால்
[3]ஆயும்மதி தான்அறிந்தோ அல்லாதோ—மேயவினை
எத்தனையாம் செய்தோம் எமதுகுல நாயகனே!
அத்தனையும் உன்அடிக்கே ஆம்.

1 உடல், உள்ளம், உரை ஆகிய மூன்று கரணங்களால். 2. கண், வாய், மூக்கு, செவி, உடம்பு என்னும் ஐந்து இந்திரியங்களால்; 3. தெளியும் அறிவு.

[1]எவைஎல்லாம் செய்தோம், [2]எவைஎல்லாம் செய்வோம்
அவைஎல்லாம் எம்செயல்கள் அல்ல ;—[3]சிவைபாலா!
அத்துணையும் நின்செயலே ; அப்பலனும் நிற்கேதான்.
முத்திஅருள் [4]வேழ முகா!

---

1 இதுவரைச் செய்தவை எல்லாம்; 2 இனிச் செய்யப்போவன எல்லாம்; 3 பார்வதி மைந்தனாகிய பிள்ளையாரே! 4 ஆனைமுகப் பெருமானே!

பெருவரங்கள் தரும்தேசி விநாயகப்
பிள்ளையார் பாதம் பணிந்து,
திருவீங்கைக் குடிமகா தேவர்அவர்
திருத்தாள்கள் வணங்கி, மேலும்
அருள்மருதங் குடிநாய னார்அவர்தம்
அடிமலர்கள் சேவித்து, என்றும்
[1]மருள்கடிந்த சிவகாமி யொடுவாடா
மலர்மங்கை அருள்கொள் வோமே,

---

1 மயக்கங்கள் அனைத்தையும் போக்கியருளிய.

## பாட்டு முதற் குறிப்பு.

[எண் - பக்க எண்]

# குடைவரைக் கோவிலின் வரைப்படம்



1. தேசிவிநாயகப் பிள்ளையார்
2. பல்லவ மன்னர் உருநாட்டு
3. திருவிங்கைக்குடி மகாதேவர் (திருவீசர்)
4. பல்லவ மன்னனின் நிறைவுருத உருநாட்டு




## குடைவரைக் கோவில் உள்ளிட்ட திருக்கோவிலின் வரைப்படம்

1 மருதங்குடி நாயனுர் (மருதீசர்); 2 அர்த்தமண்டபம்; 3 மகாமண்டபம்; 4 சண்டீசர்; 5 வாடாமலர்மங்கை; 6 மருதமரம் (தலவிருட்சம்); 7 திருமுறை-திருமறை மண்டபங்கள்; 8 அலங்காரமண்டபம்; 9 மடைப்பள்ளி, 10 மருதீசர் திருச்சந்நிதி ராஜகோபுரம்; 11 சகடக்கூடம்; 12 சுனே; 13 நால்வர், அகோர மூர்த்தி; சப்தகன்னியர், காட்சி விநாயகர்; 14 தனியம்மன், சோமாஸ்கந்தர்; 15 பிராகார விநாயகர்; 16 விசுவநாதர், விசாலாட்சி, வள்ளி - தெய்வானையுடன் ஆறுமுகப் பெருமான், பசுபதீசர் முதலிய மூர்த்திகள்; 17 தண்டாயுதபாணி; 18 துர்க்கை - லட்சுமி - சரஸ்வதி; 19 வைரவர்; 20 நவக்கிரக மண்டலம்; 21 பிள்ளையார் திருச்சந்நிதி ராஜகோபுரம்; 22 பள்ளியறை; 23 சிவகாமி; 24 வரைக் கிணறு.



கற்பகப் பிள்ளையாரான தேசிவிநாயகப் பிள்ளையார்



பல்லவ மன்னனின் நிறைவுருத உருநாட்டு



பல்லவ மன்னர் உருநாட்டு



குடைவரைக் கோவிலுள் இருந்தருளும் திருவீங்கைக்குடி மகாதேவர்
[ திருவீசர் ]



சிவகாமி (திருவீசர் அம்மன்)



வாடாமலர்மங்கை (மருதீசர் அம்மன்)



சந்திரசேகரர் — அம்மனுடன்
( 1000 ஆண்டுகட்கு முந்தியவை)



மருதீசர் திருச்சந்நிதி ராஜகோபுரம்



கிடைக்குமிடம் :

பி. க. ந க. மணியம், பிள்ளையார்பட்டி
சிறுவயல் போஸ்டு, ராமநாதபுரம் ஜில்லா.

---

விலை அணு 12.

---

சௌத் இந்தியா பிரஸ், மே. மே. வீதி, காரைக்குடி.